
MAJESTIC
Hotel
DUNSTON
CHECKS IN
குழந்தைகளுக்காக
வென்றே படம் வந்து
ரொம்ப நாள் ஆயிற்று.
இப்போது....

# சொர்க்கத்தில் நரசிம்மராவ்!



சொர்க்கத்தில் அண்ணல் காந்திஜி, இந்திரா காந்தி மற்றும் ராஜீவ் காந்தி மூவரும் பேசிக் கொண்டிருந்தபோது, நரசிம்மராவ் சொர்க்கத்திற்கு வந்து கொண்டிருப்பதாக ஒரு செய்தி கிடைத்தது. உடனே காந்திஜி அவரை எதிர்கொண்டு வரவேற்கப் புறப்பட்டார். ''பாபுஜி, நரசிம்மராவை வரவேற்க நீங்களே போவது அவசியமா?'' என்று மற்ற இருவரும் அண்ணலைக் கேட்ட போது அவர் சொன்னார் :

''சுதந்திரம் கிடைத்த உடனேயே காங்கிரஸ் கட்சியை கலைத்து விடுமாறு கூறினேன். என் பேச்சை யாரும் பொருட்படுத்தவில்லை. நரசிம்மராவ் ஒருவர்தான் என் யோசனையை முழு மூச்சுடன் நிறைவேற்றி வருகிறார். அதனால்தான்!''

– மகாராஷ்டிர மாநிலத்தில் நடந்த ஒரு தேர்தல் பொதுக் கூட்டத்தில் சிவசேனைத் தலைவர் பால்தாக்கரேயின் புதல்வர் உத்தவ் தாக்கரே கூறியது.

– டைம்ஸ் ஆஃப் இந்தியா
– பத்மா மணாளன்



● முதன் முதலில், வங்கி இத்தாலி நாட்டில் தோன்றியது. 'பாங்கோ' என்ற இத்தாலிய மொழிச் சொல்லிலிருந்து 'பாங்க்' என்ற ஆங்கிலச் சொல் வந்தது. 'பாங்கோ' என்றால் 'பெஞ்ச்' என்று பொருள். ஒரு குறிப்பிட்ட இடத்தில் பெஞ்சைப் போட்டு உட்கார்ந்து கொண்டு பல நாட்டு நாணயங்களில் கொடுக்கல் வாங்கல் நடத்தது. இதுவே வங்கியானது.

– பா. குணா

நியூசிலாந்தில் ஒருவன் ஒரு வங்கியில் பணிபுரிந்து கொண்டிருந்த மூன்று பேரை மிரட்டி இரண்டாயிரம் நியூஸிலாந்து டாலர்களை கொள்ளையடித்திருக்கிறான். இதில் நூதனமான விஷயம் என்னவென்றால் அவன் மிரட்டுவதற்குப் பயன்படுத்திய ஆயுதம் வழக்கமான கத்தியோ, துப்பாக்கியோ அல்ல! ரத்தம் நிரம்பிய சிரஞ்ச் ஒன்றைக் காட்டி, அதில் உள்ள ரத்தம் ஹெச்.ஐ.வி. பாசிடிவ் என்றும், பணம் கொடுக்க மறுத்தால் அந்த ரத்தம் உடலுக்குள் சிரஞ்ச் மூலம் செலுத்தப்படும் என்றும் மிரட்டி, பணம் பறித்திருக்கிறான் அந்த பலே திருடன். இந்த கிரிமினல் மூளைதான் எப்படியெல்லாம் வேலை செய்கிறது!

ஆதாரம் : Khaleej Times
தகவல் : சுபாஷிணி

'டன்ஸ்டன்'.

ஒரு மனிதக் குரங்கை வைத்துக் கொண்டு, விலாநோகச் சிரிக்கவைக்கும் முயற்சியில் மிக வெற்றி கண்டிருக்கிறார்கள். நாம் பார்க்காத தேவர், ராம நாராயணன் படமா என்று கேட்க வேண்டாம். காதல், கிளப் டான்ஸ், சண்டை மசாலாக்கள் இல்லாமல் இப்படியொரு ஜஎஸ்.ஐ. குழந்தைகள் படம் மிக அரிது.

ஹீரோ டன்ஸ்டன், தனது வில்லன் பாஸுக்காகப் பலவித திருட்டுத் தொழிலில் உதவுகிறது. பிறகு, தன் குடும்பத்தையே அழித்தவன் தன் பாஸ்தான் என்பதைத் தெரிந்து கொண்ட பின், அவனிடமிருந்து தப்ப எடுத்துக் கொள்ளும் முயற்சிகள் தான் கதை. குரங்குக்கு உதவ ஒரு குட்டிப் பையன்!

குரங்கு சேஷ்டைகளுக்கான முக்கியத்துவம் குறைந்துவிடக் கூடாதென்பதாலோ என்னவோ அந்த குட்டிப் பையனைக் கொஞ்சம் அடக்கி வாசிக்க வைத்திருக்கிறார்கள்.

படத்தில் ஒரு அப்பாவி குண்டு மனிதர் வருகிறார். குரங்கு அவரிடம் புரிகிற சேஷ்டைகளுக்கு தியேட்டர் குழந்தைகளிடம் மிக வரவேற்பு. சாப்ளின் ரக சிக் காமெடிதான். பூமராங் விடுவது; மேஜைக்குக் கீழிருந்து காலை நிமிண்டுவது, இன்னபிற.

குரங்கு சேஷ்டை தாங்காமல் அந்த குண்டு மனிதர் வேறு இடம் தேடி ஓட, அங்கும் காத்திருந்து மண்டையில் பலாப்பழம் வீசுகிறது டன்ஸ்டன்!

விறுவிறுப்பு கொஞ்சம் மட்டு; பெரும்பாலான காட்சிகள் ஓர் ஓட்டலுக்குள்ளேயே நடைபெறுகின்றன. இதுபோன்ற குறைகள் மிகச் சிலவே நமக்குத் தெரிந்தாலும் ரசிக்கும் வாண்டுகளுக்குக் குறை தெரிவதில்லை.

லீவ் முடிவதற்குள் கூட்டிப் போய் விடுங்கள்!

– தரமணி

# மெகா வழியில் மகா பெரியவர் திட்டம்!



• மூன்றாவது ஆண்டு விழாவின் போது....

ஹோட்டல்கள், திரு மண மற்றும் பிறந்த நாள் விருந்துகளில் மீந்து போகும் உணவு வகைகள் வீணாகப் போய் விடாமல், அவற்றை சேமித்து, பாதுகாத்து, மறுநாள் அனாதை இல்லங்களுக்கும், முதியோர் இல்லங்களுக்கும் கொடுக்கும் பணியைச் செய்து வந்தது அந்த நிறுவனம். அதுதான் சிட்னி உணவு வங்கி என்கிற தொண்டு நிறுவனம்!

சென்னை தொழிலதிபரான ஜி.டி. ரான்கா, 1993ல் ஆஸ்திரேலியாவுக்குச் சென்றிருந்த போது, இதையறிந்து ஆச்சரியப் பட்டார்.

சென்னை திரும்பிய ரான்காவுக்கு ஆஸ்திரேலியாவில் செய்தது போன்றே சென்னையிலும் செய்யலாமே என்று மனத்தில் ஓர் எண்ணம். தாம் சார்ந்துள்ள ராஜஸ்தான் யூத் அஸோஸியேஷனின் மெட்ராஸ் மெட்ரோ அமைப்பில் உள்ள உறுப்பினர்களுடன் கலந்தாலோசித்தார். எல்லோரும் இளைஞர்கள். உற்சாகத்திற்கும், உழைப்புக்கும் கேட்க வேண்டுமா? பிறந்தது சென்னை உணவு வங்கி நிறுவனம்.

"ஆஸ்திரேலியா போல் அல்லாமல் திட்டத்தைக் கொஞ்சம் மாற்றிக் கொண்டோம். சமைத்த உணவைப் பாதுகாக்க வசதியில்லாததால், அரிசி, கோதுமை, பருப்பு என்று தானியமாகப் பெற்று, அனாதை இல்லங்களுக்கும், முதியோர் இல்லங்களுக்கும் கொடுக்கிறோம். மாதம் 6000 கிலோ தானமாகக் கிடைக்கிறது. 26 அமைப்புகளுக்கு அதை வழங்குகிறோம். இந்தத் திட்டத்துக்கான முதல் ஐந்து வருடச் செலவை ரான்கா அவர்களே ஏற்றுக் கொண்டிருக்கிறார்" என்று சொல்லி பெருமிதப்படுகிறார் ராஜஸ்தான் யூத் அஸோஸியேஷன், மெட்ராஸ் மெட்ரோவின் செயலாளரான பிரதீப் பொகாரியா.

"தானியங்களை எப்படி சேகரிக்கிறீர்கள்?"

"சென்னை நகரில் கிட்டத்தட்ட 2,300 குடும்பங்களிலிருந்து பெறுகிறோம். இந்தக் குடும்பங்களுக்கு ஐந்து கிலோ பிளாஸ்டிக் டப்பாக்கள் கொடுத்துள்ளோம். அந்தக் குடும்பத்தினர் தினசரி ஒரு பிடியளவு அரிசி, கோதுமை அல்லது பருப்பு என்று மூன்றில் ஏதோ ஒன்றைப் போட்டு டப்பாவை நிறைத்து வர வேண்டும். மாதத்திற்கு ஒருமுறை எங்கள் ஆட்கள் சென்று அவற்றைப் பெற்றுக் கொண்டு வருவார்கள். இந்தத் திட்டத்திற்கு 'முத்திபார் அனாஜ்' என்று பெயர். உங்களுக்கு ஞாபகம் இருக்கலாம். அந்தக் காலத்தில் காஞ்சிப் பெரியவர் அவர்கள் பிடி அரிசித் திட்டம் என்று செயல்படுத்தினார் அல்லவா! கிட்டத்தட்ட அந்தத் திட்டம்தான் இது" என்றார் பொகாரியா.

பெறப்படும் உணவு தானியங்களை வகையாகப் பிரித்து, சுத்தப்படுத்தி ஐம்பது கிலோ கொண்ட மூட்டைகளாக அனாதை இல்லங்களுக்குக் கொடுக்கிறார்கள். தாங்கள் கொடுப்பதை முறையாகப் பயன்படுத்துகிறார்களா என்பதையும் அவ்வப்போது சென்று சோதனை செய்கிறார்கள். உணவு தானியங்கள் எப்போதும் கையிருப்பில் உள்ளதால் இயற்கை சீற்றங்களால் மக்கள் அவதிப்படும் போது உடனடியாக உதவி செய்ய முடிகிறதாம். மகாராஷ்டிரா பூகம்பத்தின் போது, உணவு தானியங்களை ஏற்றுக் கொண்டு சென்ற முதல் லாரி இவர்களுடையதுதான். இது தவிர, வெள்ளம், தீ விபத்துக்களின் போது உடனே உதவிக்கரம் நீட்டுகிறார்கள். தினசரி சேமித்து மாதம் ஒருமுறை தானியங்கள் கொடுக்கும் திட்டம் தவிர, வருடத்திற்கு ஒரு குறிப்பிட்ட நாளில் ஒரு மூட்டை, இரண்டு மூட்டை தானியங்களை மொத்தமாகவும் கொடுக்கிறார்கள் சிலர்.

"இனி அடுத்த கட்டமாக, சிட்னி உணவு வங்கி போல, சமைத்த உணவு வகைகளைப் பெற்று, விநியோகிக்கும் திட்டத்தைச் செயல்படுத்த வேண்டும். இதற்கு குளிர்சாதன வசதி கொண்ட கட்டடம் தேவைப்படும். இது தவிர, சத்துணவு நிபுணர் ஒருவரையும் வேலைக்கு வைக்க வேண்டும். எங்கள் அமைப்பில், ரத்ததானம், பல்முகாம், கண் சிகிச்சை முகாம் போன்று பலவித பணிகளைச் செய்து கொண்டிருந்தாலும், உணவு வங்கித் திட்டம்தான் எங்களுக்கு மிகவும் உற்சாகத்தைக் கொடுக்கிறது. தானத்தில் சிறந்தது அன்ன தானம் அல்லவா?" என்றார் பொகாரியா.

- ஸ்ரீநிவாசன்

"காலையில் எத்தனை மணிக்கு எழுந்திருப்பீர்கள்? எழுந்தவுடன் என்ன செய்வீர்கள்?"

"நான்கரை மணிக்கு எழுந்திருப்பேன். எழுந்து ஐந்து நிமிடத்திற்கெல்லாம் காப்பி குடித்து விடுவேன். காப்பி என்றால் டிகாக்ஷன் அதிகமாக - பால் குறைவாக - ஸ்ட்ராங் காப்பி. சில சமயம் மீண்டும் தூக்கம் வருமானால் ஆறு மணி வரைக்கும் தூங்கி விடுவேன். இல்லையானால் படிப்பேன் அல்லது துக்ளக்குக்கு எழுதுவேன்."

"என்ன படிப்பீர்கள்?"

"பத்திரிகைகளில் டைம், நியூஸ்வீக், எகனாமிஸ்ட் படிப்பேன்; அரசியல் சுயசரிதங்கள் படிப்பேன். மகாபாரதம், பகவத்கீதை படிப்பேன்."

"மகாபாரதம், கீதை போன்றவற்றை எத்தனையாவது முறையாகப் படிக்கிறீர்கள்?"

"ஆரம்பத்திலிருந்து கடைசி வரை என்று படிக்க மாட்டேன். அவற்றின் கருத்துக்களைப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகப் படிப்பதால் நடுநடுவில் தான் படிப்பேன்."



"இராமாயணம்?"

"அதை அவ்வளவாகப் படித்ததில்லை."

"ஏன்?"

"மனிதர்களின் குணாதிசயங்கள் பற்றி மகாபாரதத்தில்தான் அதிகம் சொல்லப்பட்டிருப்பதாகக் கருதுகிறேன். எது தர்மம் எது தர்மமில்லை என்கிற சிக்கலான விஷயங்களெல்லாம் இதில்தான் ஆழமாக அலசப்படுகின்றன. கதாபாத்திரங்கள்... அவரவர் இருக்கும் நிலையிலிருந்து அவரவர் தரப்பு நியாயங்கள்... மகாபாரதத்தில்தான் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. இதுதான் காரணம்."

"கோயிலுக்குச் செல்வதுண்டா?"

"உண்டு."

"எந்தக் கோயிலுக்கு?"

"இந்தக் கோயிலுக்குத்தான் என்று இல்லை..."

"சென்னையில் எந்தக் கோயிலுக்குப் போவீர்கள்?"

"கபாலீஸ்வரர் கோயிலுக்கு. அதுவும் ரெகுலராக இல்லை. எப்போதாவது போவேன்; அவ்வளவுதான்."

"வழக்கமாகவே ஒருவருக்கு நாற்பத்தைந்து வயதுக்கு மேலாகி விட்டாலே உடம்பு பற்றிய கவனம் அதிகமாக ஏற்படும். உடற்பயிற்சிகளெல்லாம் செய்ய ஆரம்பித்து விடுவார்கள். நீங்கள் எப்படி?"

"நாற்பத்தைந்து ஆனால்தானே...?"

"எனக்கே முப்பத்தொன்பது முடியப் போகிறது..."

"உங்களுக்கே என்ன உங்களுக்கே...? உங்களுக்கு ஆனால் எனக்கும் ஆக வேண்டுமா? ... அறுபத்தியொரு வயதானாலும் ஒரு உடற்பயிற்சியும் கிடையாது. வாக்கிங் ஜாக்கிங் எல்லாம் கிடையாது. ஒன்லி டாக்கிங் தான்!"

"உடற்பயிற்சி செய்ய வேண்டும் என்கிற எண்ணம் கூட இதுவரை ஏற்படவில்லையா?"

"இல்லை."

"காலையில் ஏழரை எட்டு மணிக்கெல்லாம் ஆபீஸுக்கு வந்து விடுகிறீர்கள். அத்தனை நேரத்தில் எதற்காக வருகிறீர்கள்?"

துக்ளக் ஆசிரியர் சோவோடு பேசுவதென்பதே சந்தோஷமான ஒரு விஷயம். தமது சாமர்த்தியத்தால் மட்டும்தான் மற்றவர்களைத் திணறடிப்பார் என்பதில்லை; அவர் நகைச்சுவையாகப் பேசுவதால், சிரிப்பிலும் நாம் திணறிப் போய் விடுவோம். இப்போதும், பேசிய நேரத்தை விட வாய்விட்டுச் சிரித்த நேரமே அதிகம். மீதி நேரத்தில் பேசியதிலிருந்து....



"என்னைச் சந்திக்க வருகிறவர்களெல்லாம், ஏழரை அல்லது எட்டு மணிக்கு வருவதாகச் சொல்வார்கள். அவர்களின் வசதிக்காக நானும் நேரத்திலேயே வந்து விடுகிறேன்."

"இப்படி அதிக நேரத்தை வெளியிலேயே செலவிடுவதால் வீட்டிலுள்ளவர்களோடு அதிக நேரத்தைச் செலவிட முடியாமல் போகுமே... இந்த வருத்தம் உங்கள் குடும்பத்தாருக்கு இருக்குமே?"

"அப்பாடா... விட்டது சனியன் என்று திருப்தியாக இருப்பார்கள். வெளியில் செய்கிற குழப்பத்தையெல்லாம் வீட்டில் செய்யாமல் இருக்கிறேனே... இதுவே நான் அவர்களுக்குச் செய்கிற பாசிடிவ் காண்ட்ரிபியூஷன்தானே!"

"ஒரு நல்ல கணவனாக, ஒரு நல்ல தகப்பனாக இருக்கிறீர்கள் என்கிற திருப்தி அவர்களுக்கு இருக்கிறதா?"

"அதுதான் சொல்கிறேனே... நான் அதிக நேரம் வீட்டில் இல்லாமல் இருப்பதிலேயே அவர்களுக்குப் படுதிருப்தி!"

"வீட்டுப் பிரச்னைகளிலெல்லாம் நீங்கள் தலையிட மாட்டீர்களா?"

"ரொம்ப முக்கியமான விஷயங்களில் மட்டும்தான் தலையிடுவேன். மற்றபடி எல்லாம் அவர்களே பார்த்துக் கொண்டு விடுவார்கள்..."

"துக்ளக் வாரப் பத்திரிகையானதால் அதிக வேலைப் பளு இருக்குமே?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. முன்பு சென்னையை விட்டு நான்கைந்து நாட்களுக்குக் கூட வெளியூர்களில் இருக்க முடியும். இப்போது இரண்டு நாட்களுக்கு மேல் இருக்க முடியாது. இதுதான் வித்தியாசம்."

"உங்களுடைய பொழுதுபோக்கு என்ன?"

"முன்பு போட்டோகிராஃபி. இப்போது இல்லை."

"முன்பு சினிமா, நாடகம், பத்திரிகை என்று செயல்பட்டீர்கள். இப்போது சினிமா, நாடகம் ஆகியவற்றிலிருந்து முற்றிலுமாக விலகி விட்டீர்கள். பத்திரிகை ஒன்றுதான் என்கிற நிலையில் இப்போது தானே அலுப்பு அதிகமாக இருக்க வேண்டும்?"

"அலுப்பு எப்படி வரும்? அதுதான் அரட்டை இருக்கிறதே!"

(இந்தச் சமயத்தில்

# சில விஷயங்களில் நான் ஔரங்கசீப் மாதிரி...

ரஜினியிடமிருந்து டெலிபோன் வருகிறது. 'என்ன, வோட்டுப் போட்டு விட்டீர்களா? இரட்டை இலைக்கும் கைக்கும்தானே போட்டீர்கள்...' என்று அவரிடமும் தமாஷ் செய்கிறார்!)

"பொதுவாகவே நீங்கள் பெண்களை அதிகம் கிண்டல் செய்கிறீர்கள். பெண்களால் பெரிதாக ஒன்றும் சாதித்து விட முடியாது என்கிற மாதிரியான அபிப்பிராயம்தான் உங்களுடைய எழுத்துக்களில் காணப்படுகிறது. இதற்கு என்ன காரணம்?"

"பெண்கள்தான் காரணம். நீங்கள் அவர்களிடம்தான் போய்க் கேட்க வேண்டும். ஊழலைப் பற்றி நான் எழுதுகிறேன் என்றால், அதற்கான காரணத்தை என்னிடமா வந்து கேட்பது? ஊழல் செய்பவர்களிடம்தானே போய்க் கேட்க வேண்டும்..."

"சரி... பெண்கள் மேல் நீங்கள் வைத்திருக்கும் அபிப்பிராயம் என்பது, உங்கள் வீட்டுப் பெண்களுக்கும் பொருந்துமா?"

"நான் சொல்கிற அபிப்பிராயம் என்பது எல்லாச் சமயங்களிலும் எல்லாப் பெண்களுக்கும் பொருந்துகிற மாதிரி இருக்காது. என் எழுத்துக்களைப் படித்தாலே இதுவும் புரியும். விவாதிக்கப்படுகிற விவகாரங்களைப் பொறுத்தது அது. அப்படிப் பார்க்கிறபோது என் வீட்டுப் பெண்களாயிருந்தால் என்ன, வெளியில் இருக்கிற பெண்களாயிருந்தால் என்ன! எல்லோருக்குமே என் அபிப்பிராயம் பொருந்தக்கூடியதுதான்."

"இன்றைய பெண்கள் ஆண்களுக்குச் சமமாக எல்லா வேலைகளையும் செய்ய முடியும் – புத்திசாலித்தனமாகச் செய்ய முடியும் என்று நிரூபித்துக் கொண்டிருக்கிறார்கள்..."

"பெண்களை மட்டும்தான் விமர்சனம் செய்கிறேனா என்ன... துக்ளக் ஆரம்பித்து இருபத்தாறு வருடங்களாக ஆண்களைப் பற்றித்தான் அதிக விமர்சனம் செய்கிறேன்..."

"அரசியல் ரீதியான விமர்சனங்களை விட்டு விடுவோம். பொதுவாகவே நீங்கள் பெண்கள் மேல் வைத்திருக்கும் அபிப்பிராயம் பற்றித்தான் கேட்கிறேன்..."

"பெண்களின் மேல் மிகுந்த மரியாதை வைத்திருக்கிறேன். அவர்களை மதிக்கிறேன்..."

"தனிப்பட்ட முறையில் பெண்களை மதிப்பதும் மரியாதை தருவதும் அல்ல... அவர்களைப் பற்றிய ஒரு பொதுவான அபிப்பிராயம்..."

"பொதுவாகவே... ஆண்களுக்கிருக்கிற விசால மனப்பான்மை பெண்களுக்குக் கிடையாது."

"தாய்தான் அன்பின் உருவம்..."

"தாய்க்குத்தான் அன்பு இருக்கிறதா? தந்தைக்குக் கிடையாதா? தந்தை என்ன கிராதகனா?"

"ஒரு குழந்தையைப் பெற்று, வளர்த்து, ஆளாக்குவதில் ஒரு தாய்க்கு இருக்கிற கஷ்டங்கள் அதிகமில்லையா?"

"அதைத் தாயின் கஷ்டம் என்று சொல்லுங்கள். அதையேன் தாயன்பு என்று சொல்லுகிறீர்கள்?"

"அப்படிக் கஷ்டப்பட்டு வளர்ப்பதாலேயே குழந்தைகளின்மேல், தாய்க்கு ஒருவித ஈர்ப்பு அதிகமாகிறதில்லையா?"

"ஒரு வீட்டில் குழந்தைகளைக் கவனித்துக் கொள்வதில் – அன்பு காட்டுவதில் தந்தை எங்கே குறைந்து போய் விடுகிறான். அவன் இரண்டாம்பட்சம்தான் என்கிறீர்களா?"

"தந்தையின் அன்பை விட தாயின் அன்பு சிறிதளவாவது அதிகம்தானே?"

"நான் அப்படி நினைக்கவில்லை. குழந்தைகளின் மேல் அம்மாவுக்கு இருக்கும் அன்புதான் அப்பாவுக்கும் இருக்கும்."

"நாட்டையே எடுத்துக் கொள்வோம். தாய்நாடு என்றுதான் சொல்லுகிறோம். பாரதத் தாய் என்றுதான் சொல்லுகிறோம். காரணம் என்ன?"

"ஏன் அப்படிச் சொல்ல வேண்டும்? தந்தை நாடு என்று சொல்லிப் பாருங்களேன்...."

"வேடிக்கையாக இருக்கும்!"

"தாய்நாடு என்பது பழக்கமாகி விட்டது. தந்தை நாடு என்பதும் பழக்கத்துக்கு வந்தால் சரியாகிவிடும். தந்தை என்பவன் தாயைப் போல கர்ப்பமாவதில்லை; அந்தக் கஷ்டம் இல்லை என்பது தவிர, குழந்தையோடு தாயின் கஷ்டத்தையும் சேர்த்து தந்தைதானே தாங்க வேண்டியிருக்கிறது...."

"பெரும்பாலும் சாதாரணக் குடிசைப் பகுதிகளில் பார்த்தால், பல ஆண்கள் சம்பா

●□●□●□●□●□●□●□●□●□●□●□●□●

**"தெருவில் போகும்போது எவனோ என் பேண்ட் பாக்கெட்டிலிருந்த...."**

**"பர்ஸ் அபேஸா?"**

**"இல்லீங்க! துண்டு பீளேடைக் கிளப்பிட்டுப் பூட்டானுக சார்!"**





KANMANI
A G R O
G O L D
F A R M

ஸ்ரீ அன்னையே துணை

# KANMANI AGRO GOLD FARM

9,10 TH AVENUE, ASHOK NAGAR, MADRAS - 600 083. TEL: 482 43 79

**[A KANMANI GROUP OF COMPANY]**

CATERING CASH CROP CULTIVATION
LIKE VEGETABLES, FRUITS & FLOWERS

## ACCEPTS FIXED DEPOSITS

*STRICTLY UNDER 45 S. CHAPTER III C OF RBI ACT OF 1934*

| PERIOD | 1 YEAR | 2 YEARS | 3 YEARS |
|---|---|---|---|
| INTEREST PAID QUARTERLY | @ 24% P.A. | 24% P.A. | 24% P.A. |
| INCENTIVE PAID INITIALLY | 3% | 6% | 9% |
| SPL. INCENTIVE FOR DEPOSITORS OF RS. 10,000/- AND ABOVE | | | 3% |

*Plus Attractive Gifts for all Depositors.*

# மாபெரும் முன் வெளியீட்டுத் திட்டம்

## ஐம்பெருங் காப்பியங்கள் முதலானவை

## ஐம்பெருங்காப்பியங்கள்

ஜைனதத்துவநூலாசிரியர்
ஸ்ரீபுராணச்செம்மல்

பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரன் எம்.ஏ.
அவர்கள் உரையுடன் 1. சிவகசிந்தாமணி
2. சிலப்பதிகாரம் 3. மணிமேகலை
4. வளையாபதி 5. குண்டலகேசி

5 தொகுதிகள்

விலை ரூ.600 சலுகை விலை ரூ.420

## பட்டினத்தார் பாடல்கள்

மூலமும் தெளிவுரையும்

உரை. பேரா. அ. மாணிக்கம் எம்.ஏ.

ஒரே தொகுதியில்

விலை ரூ.100 சலுகை விலை ரூ.70

## தாயுமானவர் பாடல்கள்

மூலமும் தெளிவுரையும்

உரை: பேரா. அ. மாணிக்கம் எம்.ஏ.

2 தொகுதிகள்

விலை ரூ.120 சலுகை விலை ரூ.84

## பதினெண் புராணங்கள்

உரைநடையில் - முதல் தொகுதியில்
பேரா. அ.ச. ஞானசம்பந்தம் எம்.ஏ.

1. பிரம்ம புராணம் 2. பத்ம புராணம்
3. விஷ்ணு புராணம் 4. வாயு புராணம்
5. பாகவத புராணம் 6. நாரத புராணம்
7. மார்க்கண்டேய புராணம் 8. அக்னி
புராணம் ஆகிய முதல் எட்டுப் புராணம் அடங்கியது

விலை ரூ.90 சலுகை விலை ரூ.63

## திருவிளையாடற் புராணம்

மூலமும் தெளிவுரையும்

உரை: இலக்கியத் தென்றல் ஜோதி, எம்.ஏ.

5 தொகுதிகள்

விலை ரூ.300 சலுகை விலை ரூ.210

முக்கிய அறிவிப்பு: பணம்(சலுகை விலை) அனுப்பக்கடைசிதேதி - 25.5.96

ஜூலை இறுதியில் நூல்கள் அனுப்பப்படும். குறித்த நேரத்தில் எவ்வளவு பேர் பணம் அனுப்புகிறார்களோ அந்த அளவுக்குத்தான் நூல்கள் அச்சிடத் தீர்மானித்திருக்கிறோம். ஆகவே நூல்கள் வேண்டுவோர் 25.5.96க்குள் பணம் அனுப்புக. வழக்கம்போல் V.P.P.யில் நூல்கள் அனுப்பப்படும். தபால் செலவினை மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்க.

M.O. or D.D. அனுப்ப வேண்டிய முகவரி: TAMIL NILAYAM, ARR Complex, 141, Usman Road, T. Nagar, Madras-600 017. Phone : 825 7995 Near Panagal Park

திப்பதைச் சாராயம் குடிப்பதற்கே செலவிட்டு விடுகிறார்கள். தாய்தான் குழந்தைகளைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறாள்..."

"குடிசைப் பகுதிகளில் இப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது என்றால், இந் நேரம் பல குடிசைப் பகுதிகள் அழிந்தே போயிருக்கும்..."

"பல ஆண்கள் அங்கே குடிக்கிறார்கள் என்பதும் நிஜம்!"

"அவன் ஏன் குடிக்கிறான்? மனைவியின் தொல்லை பொறுக்க முடியாமல்தான் குடிக்கிறானோ என்னவோ, யார் கண்டது? நீங்களும் நானும் போய் விசாரித்துப் பார்த்தோமா என்ன... எப்படியிருந்தாலும் பெண்களின் மேல் நான் அளவு கடந்த மரியாதை வைத்திருக்கிறேன். அதே சமயத்தில் அவர்களுக்கு அவ்வளவு விசால மனப்பான்மை கிடையாது. இதுதான் என் அபிப்பிராயம்."

"சினிமா, நாடகம் எல்லாவற்றையும் முழுமையாக விட்டு விட்டதால்..."

"இழப்பு ஏதும் இல்லை."

"இழப்பு என்பது இல்லை. மனரீதியாக..."

"நான் செய்கிற எந்தக் காரியத்திலுமே ஏதோ புரட்டிப் போட்டு விடுவேன் என்று நான் நினைப்பதில்லை. அதனால் எனக்கு எந்தவிதமான பாதிப்புமே ஏற்படுவதில்லை. ஒரு பேச்சுக்குச் சொல்கிறேன்... நாளைக்கே துக்ளக் நின்று போனால் கூட நான் பாதிக்கப்பட மாட்டேன். எல்லாமே தாற்காலிகமான விஷயம்தான் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன்."

"அப்படியொரு மனப்பக்குவமா?"

"அப்படியில்லை. இயல்பாகவே எனக்கு எதன் மீதும் பிடிப்பு என்று எதுவும் இல்லை."

"அப்படியொரு பிடிப்பு இருந்தால்தான் செய்கிற காரியத்தைச் சிறப்பாகச் செய்ய முடியும் என்று சொல்லுவார்கள்..."

"அதனால்தான் நான் எதையும் பிரமாதமாகச் செய்யவில்லையோ என்னவோ! இருந்திருந்தால் பிரமாதமாகச் செய்திருப்பேனோ என்னவோ, யார் கண்டது? அப்படியொரு பிடிப்பு இல்லாததே கூட எனக்கொரு பலம் என்றுதான் நான் நினைக்கிறேன்... 71 தேர்தலில் காமராஜர் தோற்றுப் போனபோது ஒரு பெரிய எழுத்தாளர் ஒருவர் மிகவும் அப்செட் ஆகிப் போனார். நான் அப்படியாகவில்லை. என்னையே கிண்டல் பண்ணி ஓர் அட்டைப் படம் போட்டு விட்டு வழக்கமான வேலைகளில் ஈடுபட்டு விட்டேன்.

"கீதை படிப்பதால் இப்படியொரு மனநிலை உங்களுக்கு ஏற்பட்டிருக்கலாமோ!"

"அப்படிச் சொல்ல முடியாது. கீதை படிப்பதற்கு முன்னாலேயே எனது மனநிலை இப்படித்தான் இருந்தது. .காரணம் எனக்கு எதி

"என் மனைவிக்குக் காது மந்தம்னு தெரிஞ்சதும், வேலைக்காரி ஐம்பது ரூபாய் அதிகம் கேட்கிறா!"

"ஏன் அப்படி?"

"ஊர் வம்பை ரெண்டு மூணு தடவை சொல்ல வேண்டியிருக்காம்!"

- சீர்காழி வி. ரேவதி

●□●□●□●□●□●□●□●□●□●□●□●□●

லுமே ஒரு தீவிரம் இல்லை என்பதாக இருக்கலாம். டி.டி.கேயில் சட்ட ஆலோசனை சொல்லுகிற போது, நேரமிருந்தால் நாடக வசனம் எழுத ஆரம்பித்து விடுவேன். நாடகம் நடிக்கிற சமயங்களில் நேரம் கிடைத்தால் சட்ட ஆலோசனைகள் தொடர்பான விஷயங்களைப் பார்ப்பேன். ஷூட்டிங் இடைவேளையின் போது துக்ளக்குக்கு எழுதுவேன். இப்படி நான்கு வேலைகளை ஒரே சமயத்தில் செய்த காரணத்தால் கூட என்னால் எதிலும் சிகரங்களை எட்ட முடியாமல் போயிருக்கலாம். அதுபற்றிய கவலையும் எனக்குக் கிடையாது. நான் அடைந்திருக்கிற இந்த நிலையே எனது பவிசுக்கு அதிகம் என்றுதான் நினைக்கிறேன். பத்திரிகையாளர்களிலேயே எடுத்துக் கொள்ளுங்கள்... அனைத்திந்திய அளவில் எடுத்துக் கொண்டால் குல்தீப் நய்யாரும் அருண்ஷோரியும் செய்யாத ஒன்றை நான் செய்துவிடவில்லை. எனது நாடகக் குழுவை எடுத்துக் கொண்டாலும் என்னைவிடச் சிறப்பாகச் செய்தவர்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள். இருந்தாலும் அவர்களெல்லாம் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பெயர் எனக்கு மிகவும் சுலபமாகவே கிடைத்து விட்டது. இதற்கு எனது உழைப்புத்தான் காரணம் என்று சொல்ல மாட்டேன். அதிருஷ்டம். அதிர்ஷ்டத்தில்தான் என் காலமே ஓடிக் கொண்டிருக்கிறது!"

"முழுக்க முழுக்க அதிர்ஷ்டம் என்று எப்படிச் சொல்லிவிட முடியும்?"

"தன்னடக்கத்துக்காக அப்படிச் சொல்லவில்லை. நானொன்றும் தன்னடக்கத்துக்குப் பெயர் போனவன் அல்ல. நேரம், காலம், மற்றவர்களின் முட்டாள்தனம்.. இவையெல்லாம் தான் எனக்கு மிகவும் உதவி செய்திருக்கிறது. ஓட்டப் பந்தயத்தில் நான் ஜெயிக்கிறேன் என்றால், என்னோடு ஓடி வருபவர்கள் மோச



**"செருப்பு புதுசா? ஆச்சரியமா இருக்கே?"**
**"இதுல ஆச்சரியத்துக்கு என்ன இருக்கு?"**
**"சமீபத்துல நம்ம ஊர்ல எந்தக் கல்யாணமும் நடக்கலையே, அதுதான்!"**
**- திருத்துறைப்பூண்டி எஸ். கந்தசாமி**



மாக ஓடி வருவதுதானே தவிர, நான் பிரமாதமாக ஓடுகிறேன் என்பதல்ல. இதற்கெல்லாம் காரணம், என் அப்பா குடும்பத்திலுள்ள பெரியவர்களும் சரி, அம்மா குடும்பத்திலுள்ள பெரியவர்களும் சரி நிஜமாகவே பெரியவர்கள் – நேர்மையான வாழ்க்கையை வாழ்ந்தவர்கள் என்பதாகக் கூட இருக்கலாம்.

"நீங்கள் வெளிநாடுகளுக்குப் போயிருக்கிறீர்களா?"

"ஜெயவர்த்தன, அமிர்தலிங்கம் ஆகியோரைப் பேட்டி காண்பதற்காக இலங்கைக்கு மூன்று நான்கு முறை சென்றிருக்கிறேன். நாடகக் குழுவோடு, சிங்கப்பூருக்கு ஒரேயொரு தடவை போயிருக்கிறேன்."

"மற்ற நாடுகளுக்கு?"

"போனதில்லை. அப்படியொரு ஆசையும் வந்ததில்லை. போய் என்னத்தைச் சாதிக்கப் போகிறோம்? சில விஷயங்களில் ஔரங்கசீப் மாதிரியான தன்மை கூட என்னிடம் இருப்பதாக நினைக்கிறேன். ஒரு சம்பவம் சொல்கிறேன். நாடகத்துக்காக டெல்லி சென்றிருந்தோம். அப்போது மற்றவர்களெல்லாம் தாஜ்மகால் பார்ப்பதற்காகப் புறப்பட்டபோது நான் மறுத்து விட்டேன். அவர்கள் பார்த்து வந்த பிறகு, தாஜ்மகால் அப்படியிருக்கிறது, இப்படியிருக்கிறது என்று கதையளப்பார்களே, எப்படிச் சமாளிப்பது என்று யோசித்தேன். பக்கத்திலிருந்த ஒரு கடையில் போய் தாஜ்மகால் பற்றி ஒரு சிறு புத்தகத்தை வாங்கிக் கொண்டு வந்து நெட்டுருப் போட்டு வைத்துக் கொண்டு, பார்த்து வந்தவர்கள் அறிந்திராத விஷயத்தையெல்லாம் நான் அவர்களுக்குச் சொன்னேன். என் ஆர்வம் இவ்வளவுதான்."

"வெளிநாடுகளுக்கெல்லாம் சென்று வருகிறபோது, நேரடியானதொரு அனுபவம் கிடைக்குமே?"

"என்ன அனுபவம்? அமெரிக்காவுக்குச் சென்று வந்தவர்களை விட அதிகமாக அமெரிக்காவைப் பற்றி என்னால் சொல்ல முடியும். அங்குள்ள மக்கள், அவர்களின் பிரச்னை, அரசியல் என்று எல்லா விஷயங்களையும் படித்தே தெரிந்து கொள்ள முடியும் என்கிறபோது, எதற்காக நேரில் போக வேண்டும்? வேண்டுமானால் 'ஆ... இத்தனை மாடிக் கட்டடமா' என்று மலைக்கலாம். இந்த மலைப்புக்காகவா அங்கே போய் வர வேண்டும்?"

"எப்போதும் நீங்கள் இராணுவச் சீருடையிலேயே இருப்பதற்கு என்ன காரணம்?"

"இதுதான் எனக்குப் பொருந்துகிறது என்று நினைக்கிறேன். தவிர, இராணுவத்தின் மேல் எனக்கொரு மரியாதை."

"அப்படியிருக்கும் போது நீங்கள் இராணுவத்திலேயே சேர்ந்திருக்கலாமே?"

"நான் படிக்கிற காலத்தில் என்னை என்.சி.சி.யிலேயே சேர்த்துக் கொள்ள மறுத்து விட்டார்கள். காரணம், பிசிகல் ஃபிட்னஸ்."

"அப்படிச் சொன்னபோது இனியாவது உடம்பை திடகாத்திரமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்கிற எண்ணம் ஏற்படவில்லையா?"

"இல்லை. அது இல்லையென்றால் இன்னொன்று என்கிற மனோநிலைதான் எனக்கு, அப்போதும்!"

"இப்போது சாட்டிலைட் சானல்கள் பெருகி விட்டன. ஸ்டார் மூவிஸ் போன்ற வெளிநாட்டுச் சானல்களில் – அங்கே அதெல்லாம் சகஜமான விஷயங்களாக இருந்தாலும் – நாமெல்லாம் குடும்பத்தோடு உட்கார்ந்து பார்க்க முடியாத அளவுக்கு – அதிர்ச்சியளிக்கிற அளவுக்கு செக்ஸ் காட்சிகள் காட்டப்படுகின்றன. 'Air ways are free' என்பதால் ஒன்றும் செய்ய முடியாது என்கிற நிலையில் என்னதான் செய்வது?"

"தடுக்க முடியாது. ஆதிகாலத்தில் நாடகம் என்ற ஒன்று வந்தபோது நமது பண்பாட்டுக்கு அதுவே ஓர் அதிர்ச்சிதான். அதனால் சினிமா வராமல் போய்விட்டதா, அதை நாம் ஏற்றுக் கொள்ளாமல்தான் போய் விட்டோமா... விஞ்ஞான முன்னேற்றத்தால் வருகிற மாற்றங்களைத் தவிர்த்துவிட முடியாது. மாற்றம்தான் இயற்கையானது என்பதால் ஏற்றுக் கொண்டுதான் ஆகவேண்டும். இருப்பினும் வெகுஜனக் கருத்துக்களை உருவாக்குவதன் மூலம் வீழ்ச்சியைத் தடுக்கலாம். அல்லது தாமதப்படுத்தலாம். அவ்வளவுதான் செய்ய முடியும்."

சந்திப்பு : **இளங்கோவன்**
படங்கள் : **ராஜநாராயண்**

# ஆகாயச் சருகுகள்

மேலாண்மை பொன்னுச்சாமி

## 6

கல்யாணமான மறுமாதம்.

வீட்டின் பின்புறம் ஒரு சின்ன வெட்டவெளி. சுற்றிலும் ஆள் உயரத்திற்கு மேல் சுற்றுச்சுவர். குளிப்பு, துணி துவைப்பு எல்லாம் அங்குதான்.

சாயங்காலம். அஞ்சுமணித் தங்க வெயில். மேற்கு மலைத் தொடர்ச்சியின் தலையில் கனத்த மேகங்கள். அந்திச் சூரியனின் தீண்டலில் புல்லரித்துப் போன அந்த மேகங்களின் ஒளித்ததும்பல். "ச்சீ, போங்க" என்று வெட்கிச் சிணுங்குகிற மாதிரி ஒரு சின்ன மேகம் சூரியனை மறைக்க முயன்று முடியாமல், தங்கப் பாளமாய்த் தகதகத்தது.

மேகங்களின் தகதகப்பில் வெயிலின் நிறமே வினோதமாகி.. கனிந்து ஒளிர்ந்தது. வெள்ளைச் சுவர்களில் அந்த வினோத ஒளிபட்டு.. எதிரொளித்து.. ஒரு மாயலோக அழகாகத் தோன்றியது. கவனித்துப் பார்க்கும் மனங்களில் பிரமிப்பான ஒரு மயக்கம்.

கொடியில் காய்ந்த துணிகளை ஒவ்வொன்றாக உருவிக் கொண்டிருந்தாள், பிரேமா. அவரைக் கொடியின் பக மைப் படர்வில் அந்திச் சூரிய ஒளி பட்டு.... கண்ணையும் மனசையும் மயக்கிச் சொக்கவைக்கிற வினோத உணர்வை மனசில் அசைபோட்டு ரசித்துக் கொண்டே....

துணிமணிகளை உருவினாள். உருவிய துணிகளை இடது குடங்கையிலும், தோளிலும் போட்டுக் கொண்டாள். உருவிக் கொண்டே நகர்கிறபோது...

உடுத்தியிருக்கும் சேலையும் உருவப்படுகிற உணர்வு, அந்த உள்ளுணர்வின் பதற்றத்தில் நெஞ்சைப் பார்த்தாள். மாராப்புச் சேலையைக் காணோம். பக்கென்றிருந்தது. உயிரே பறி போன மாதிரி, துடிப்பான தோற்றம். கழுத்தடியில் ஓர் உஷ்ணக் காற்று. பாம்புச் சீறலாக ஒரு சுவாசத் தீண்டல். பதறிப் போய் சட்டென்று திரும்புகிறபோது –

இடுப்பில் பால்ச்சாமி கைகளின் இறுக்கம். திரும்பிய முகத்தைத் திரும்ப முடியாமல் வலது கன்னத்தைக் கவ்விய அவன். அவனது எச்சிலின் ஈரவெப்பம்.

அவனை அவனென்று உணர்வதற்குள், முழுசாக ஆக்ரமித்து விட்ட அவன். பின்பக்கமெல்லாம் அவனது வெப்பம். முன்பக்கத்தில் தாபமும், தவிப்புமாய் தழுவிப் படர்கிற தகிப்பான கைகள்.

அவளைச் சுட்ட பயத் தீ. நாணமல்ல... அச்சத் தீ. உயிர் வரை சுட்டுக் கருக்கிய தீ. அவள் ஆத்மாவே, படபடத்து கிலியில் நடுங்கித் துடிக்க –

ஒரு பாம்பை உதறுகிற மாதிரி, அவனைத் திமிறி உதறிவிட்டு ஓடினாள். அரண்டு போய் இருண்டு போன முகம். பேயைக் கண்ட பீதியில் வெலவெலத்துப் போய், திகிலடித்த முகமாய்... அவள்.

வெட்டுப்பட்டுத் தெறிக்கும் மரச்சிறாய் போல, பயத்தில் அடிபட்டு, வீட்டுக்குள் ஓடியே போய் விட்டாள்.

பால்ச்சாமிக்குள் கற்றையாய் அறைந்த ஏமாற்றம். மோகப் பெருவெள்ளமும், ஏமாற்றமும் அவனை அடித்துக் கொண்டு செல்ல... உடம்பெல்லாம் காய்ச்சல் கண்டதைப் போல உணர்ந்தான். தகிப்பும் நடுக்கமுமாய் ஏமாற்றத்தில், நிலைகுலைந்து போய் நின்றான்.

ஓர் இனிய அனுபவத்தை இழந்த கொதிப்பு. இளமைத் துள்ளலான இயல்பான வேட்கையைப் புறக்கணித்து அவமதிக்கப்பட்டதால்... வந்த அவஸ்தை. கோபாவஸ்தை.

'எதுக்கு இவ... இப்படிச் செய்றா? இப்ப என்ன ஆகிப் போச்சு...? கல்யாணமான புதுச் சோடிக 'அப்படி, இப்படி' விளையாடுறது தப்பா?'

அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

உள்ளுக்குள், காயப்பட்டுப் போன பால்ச்சாமி, அதன் ரணமும் ஆத்திரமும் முகத்தில்.

விளையாட்டுக் குறும்பும், இளமை வேட்கைத் துடிப்புமாய் வந்து துள்ளல் சேட்டை செய்த பால்ச்சாமி. கட்டித் தழுவி விளையாடிய ஒரு சின்னக் குதூகலம்.

• அந்தத் தழுவலை ஏற்று, அங்கீகரித்து... வெட்கி... செல்லச் சிணுங்கலாகச் சிணுங்கி... கொஞ்சலாய் கெஞ்சி... 'ச்சீய்... போங்க' என்று பொய்க் கோபமாய் திமிறிக் கொண்டு ஓடியிருந்தால்....

மனசுக்குள் ஒரு வசந்தம் புன்னகைத்திருக்கும். திருப்திப்பட்டிருக்கும். வெட்கி ஓடுகிற அவளைப் பார்த்து, குறும்பு மின்ன வெற்றிச் சிரிப்புச் சிரிப்பதில்தான்... ஓர் ஆத்மசுகமே ஏற்பட்டிருக்கும். அதுதான் அவன் குறிக்கோள்.

ஆனால்... என்ன இது?

விளையாடுவதற்கு வந்தவனை விளக்குமாற்றால் எதற்கு அடிக்கணும்? ஆசையோடு வந்தவனை, பாம்பாக நினைத்துப் பயந்து என்னத்துக்கு அசிங்கப்படுத்தணும்?

வேதனையும் குழப்பமுமாய்... சில நிமிஷங்கள், அங்கேயே வேர்பிடித்து நின்றான். மனசின் படபடப்பு அடங்குகிற வரை அங்கேயே நின்றான். சுற்றிலும் பரவிக் கிடந்த சூன்யம், அவனை ஒரு முள்ளாக உறுத்தியழுத்த... ஆழ்ந்த பெருமூச்சு விட்டான். மெல்ல வீட்டிற்குள் நுழைந்தான்.

உள்ளே போனால் –



அவனைத் தூக்கி வாரிப் போட்டது போலிருந்தது. பிரேமா தரையில் உட்கார்ந்து, விசும்பி விசும்பி அழுகிற பரிதாபம். குத்துக்கால் வைத்து உட்கார்ந்து... முழங்கால்களுக்கிடையில் கைகளை வைத்து, அதன் மேல் முகம் கவிழ்த்து...

விசும்பல்களில் தேம்பியதிர்கிற அவளது புஜங்கள், முதுகுப்புறம். அவனை ஆழமாய் அதிர்ந்து போக வைத்த குலுங்கல்கள்.

அடிபட்ட அவமானக் கோபத்தில் உள்ளே வந்த பால்ச்சாமி, அடித்து விட்ட குற்ற உணர்வுக்கு ஆளானான். தெரியாமல் மிதித்து விட்டோமோ என்ற மர்மப் பதைப்பு.

கோபித்துக் கொண்ட குடும்பத்தை உதறிவிட்டு, இவனை நம்பிச் சரணடைந்த ஆத்மா. இவன் குடும்பத்தோடு வந்த சண்டையிலும், பட்டுக் கொள்ளாமல்... பவ்யமாய் இவன் பின்னால் நின்ற பண்பு.

அவனுக்குள் சுரந்த இரக்கம். பதற்றம்.

"என்ன.... என்ன....! என்னம்மா பிரேமா? என்னத்துக்கு அழுறே?"

அசலான கருணையில் நனைந்த அவனது பதைப்புச் சொற்கள். விருட்டென்று நிமிர்ந்து பார்த்



அமெரிக்காவில் டிரைவிங் லைசென்ஸ் மூன்று ஆண்டுகளுக்குச் செல்லும். அவரவர் பிறந்த தேதியன்றுதான் லைசென்ஸ்களைப் புதுப்பித்துக் கொள்ள வேண்டும்! அதனால் புதுப்பிப்பதை மறக்கவே முடியாதல்லவா?

– உடுமலை. எஸ். பொன்னுசாமி

தான். அரிவாள் வெட்டு போன்ற கோபப் பார்வை. மறுபடியும் முகம் கவிழ்த்து அழுகிற பிரேமா.

"என்னாச்சு...? என்னம்மா? நா என்ன பண்ணிட்டேன்? ஏதாச்சும் தப்பா பண்ணிட்டேனா?"

பதற்றத்தில் குழைகிற அவன். ஆறுதல் சொல்லக்கூட தொடத் தயங்குகிற பயம்.

"எதுக்கு அழுறே பிரேமா? சொல்லிட்டு அழு..."

"எனக்கு இதெல்லாம் பிடிக்காது."

"புருஷன், பொண்டாட்டியை கட்டிப் பிடிக்கக் கூடாதா? அது ஒரு குத்தமா?"

"பட்டப் பகல்லேயா? அதுக்கொரு நேரம் காலம் இல்லியா?"

"கல்யாணமான சின்னஞ்சிறுசுக... குறும்பு பண்ணி வெளையாடுறதுக்கு, என்ன நேரங் காலம்?"

"சின்னஞ்சிறுசுன்னா.... பொரட்டாசி மாச நாயா? அதுக்கொரு எடம் பொருள் இல்லியா? நேரம் காலம் வேண்டாமா?"

"இப்ப யாரு பாத்துட்டா? இங்க யாரு இருக்காக? நாம தெருவுலேயா நிக்கோம்...?"

"இதெல்லாம்... எனக்குப் பிடிக்காது. என்னாலே தாங்க முடியாது."

"சரி... சரி... அழாதே..."

வெளியே போய் விட்டான். 'சரி... சரி'தான் மன்னிப்பு. மன்னிப்புக் கோருகிற தாழ்ந்த சுருதி.

வெளியே வந்த பால்ச்சாமிக்கு, ஒரே புதிராக இருந்தது. பிரேமாவின் எல்லை மீறிய கூச்ச சுபாவமும், அளவு தாண்டிய லஜ்ஜையும் புரிந்தது.

..... நாலைந்து நாட்களுக்கு முன்பு –

நடந்த சம்பவம், மனசுக்குள் அலை அலையாக வந்து, இன்றைய நிகழ்வோடு பின்னியது; பிரேமாவை பால்ச்சாமிக்குத் துல்லியப்படுத்தியது.

அலுமினிய வாளியில் வெந்நீரை ஊற்றினாள், பிரேமா. ஆவி இழை இழையாய்ப் பறந்தது, மேல்நோக்கி. பச்சைத் தண்ணீரை ஊற்றி... 'பதம்' பார்த்தாள். இதமான சூடு.

"குளிக்கக்கிடுதீகளா?"

"ம்."

சோப்பு, துண்டுடன் வந்தான். குளித்தான்.

"துண்டு தரட்டா?"

"கொண்ணாந்துட்டேன்."

"வேறெ எதுவும் வேணுமா?"

"நீதான் வேணும்."

"ச்சேய்..."

நேரம் ஒன்பதுக்கு மேலாகி விட்டது. சோற்றுப் பானைக்கு நீரூற்ற... காய்ச்சி ஆற வைத்த பாலுக்கு 'உரை' ஊற்ற... என்று இரவின் இறுதி வேலைகளில் பிரேமா. வீட்டைப் பெருக்கி முடித்து, பத்தி பொருத்தி வைத்தாள்.

குளித்து முடித்து விட்டு வந்தான். துவட்டிய தலை. ஈர ரோமங்களின் இன்பச் சிலிர்ப்பு. வேர்வைப் பிசுக்கும் அலுப்பும் கழுவிய உடம்பு. புடைத்தெடுத்த தான்யமாய் தேகமே புதுமையாய்... புத்துணர்ச்சியாய்... சுத்த சுதாரிப்பு...

அந்த இளங்கணவனுக்குள் புதிய ஆசைத் துளிர். துளிர் விட்ட வேகத்தில் விருட்சமாகி விடுகிற ராத்திரிக் குறும்பு. அடுக்கு மேல் அடுக்காக அடுக்குகிற மோகத் திமிர். நினைக்க நினைக்க மனசே திணைத்து விம்முகிற வெறி...

பிரேமா குளிக்கிற சப்தம். நீர் விழுந்து வழிந்து தெறிக்கிற சப்தம். சோப்பின் தேய்ப்புச் சப்தம். மனசுக்குள் பிம்பங்களை கற்பனை செய்கிற மெல்லிய கிளுகிளுப்புச் சப்தம்.

தயாரிப்பில் மும்முரமானான், பால்ச்சாமி. பாயை விரித்தான். தலையணையை – விரிப்பை எடுத்துப் போட்டான். விளக்குகளை அணைத்தான். விடிவிளக்கைப் போட்டான். பச்சை நிற வெளிச்சம். விடிவிளக்கில் ஒரு சுவிட்ச். அதைப் போட்டால்... இன்னும் சற்று வெளிச்சம் கூடுதலாகும்.

மல்லிகைப் பூவின் வாசம் 'கம்ம்'மென்று வந்தது. கண்ணைத் திறக்காமல் உறங்குவது போலப் படுத்திருந்தான். இவன் உறக்கத்தை அவள் நம்ப வேண்டும் என்பதற்காக, மூச்சை இழுத்து இழுத்து ஒரே சீராக விட்டான்.

பக்கத்தில் படுக்கிற பிரேமா. இவனுக்கும் அவளுக்கும் இடையில் உறுத்தலான இடைவெளி. அவனுக்குள் ஓர் ஏக்கம்.

அவள் உடம்பு தானாக நெருங்கி வந்து உரசாதா? மார்பில் அவள் குளிர்ந்த முகம், ஸ்பரிசமாகாதா? அவளது பூங்கரங்களின் ஈரக் குளிர்ச்சி, இவனது தேக ரோமங்களில் படிந்து மின்சாரம் பாய்ச்சாதா?

மனசு கிடந்து ஏங்கித் தவித்தது.

அப்படியெதுவும் நடக்கவில்லை. அவள் முதுகைக் காட்டிக் கொண்டு ஒருக்களித்துப் படுத்துக் கொண்டாள்.

சில கணங்கள் –

நத்தையின் நிதானமாக, கனத்து நகர்ந் தன.

இவன் மெல்லப் புரண்டான். காலைத் தூக்கி மேலே போட்டான். அவள் நெஞ்சில்

குறுக்காகக் கைபோட்டான்.

"இன்னும் ஒறங்கலியா?"

"இல்லே?"

"நடிப்பா?"

"நீயா எழுப்புதியான்னு பாத்தேன்..."

"ஒறங்குறவுகளை எதுக்கு எழுப் பணும்?"

"எதுக்கா? ஓய்... ஒண்ணும் தெரி யாதோ?"

"உங்களை நா உசுப்பவா?"

"ஏன்... உசுப்புனா என்ன?"

"நா என்ன, உதுத்துன (மானத்தை உதிர்த்தவள்)வளா?"

"நல்ல பொஞ்சாதி, புருஷன் கிட்டே வெக்கமில்லாம இருக்கணும். தெரியுமா?"

"நா ஒண்ணும் நல்ல பொஞ்சாதி யில்லே."

அவன் சிரித்தான். சிரிப்பினூடே மேலாக்கை விலக்க முயன்றான். இயல் பாகச் செய்வது போல நடிக்கிற பாவனை.

அவன் கைகள் வேகமும் விரைப்பு மாய்த் தடுத்தன.

"என்ன....?"

"லைட்."

"விடிவிளக்குதானே? இருக்கட் டும்."

"அப்ப வேண்டாம்...."

"எனக்கு வேணும்."

"அதெல்லாம் முடியாது. இதென்ன... புதுப் பழக்கம்?"

"கண்ணு மூடுன இந்த வெளிச்சம் ஒன்னை என்ன செய்யுது?"

"என்னாலே முடியாது."

"எனக்கொரு ஆசை."

"ம்?"

"வெளிச்சத்துலே ஒன்னைப் பாக் கணும்."

"பாருங்க."

"ஒன்னை மட்டும் பாக்கணும். துணி மணியையில்லே." இவன் பக்க மாய் விருட்டென்று திரும்பினாள்.

"அது. இந்த ஜெம்மத்துலே நடக்காது" என்று சிரித்துக் கொண்டே சொன்னாள், சிரிப்பின் மென்மையைக் கடந்து, அவள் சொல்லிலிருந்த உறுதி. வைராக்கியம்.

அதைச் சோதித்துப் பார்க்க, மீண்டும் கை வைத்தான். தட்டி விட் டாள். நெருங்கி வரும் ஏமாற்றத்தை உணர்ந்தான்.

"ஏன், நடக்காது?"

"நடக்காதுன்னா நடக்காதுதான்."

"அதான்... ஏன்னு கேக்கேன். புரு ஷன்ங்குற உரிமையிலே நா வற்புறுத் துனா...? கட்டாயப்படுத்துனா?"

"செத்த கட்டையைத்தான் பாப்பீக."

பால்ச்சாமிக்குள் அரிவாள் வெட்டு விழுந்த மாதிரியிருந்தது. கையை எடுக்கவில்லை, அவன். உறைந்து போன கை. அதிர்வில் வெல வெலத்து திகைத்துப் போன கை. கையின் ஸ்தம்பிப்பிலேயே, அவன் மன அதிர்வின் அளவை உணர்ந்த பிரேமா...

அவளுக்குள் சுரந்த கருணை. அந்த அதிர் விலேயே அவனது அன்பின் அடர்த்தியை - ஆத்ம துடிப்பை - உணர்ந்த நெகிழ்வில் விளைந்த இரக்கம்.

அவள் ஒரு பூ மாதிரி மென்மையாகப் புரண்டாள், அவன் பக்கமாய்.

அவனது ரோமம் அடர்ந்த மார்பில் முகம் புதைத்தாள். கன்னத்தால் உராய்ந்தாள். அவனது வயிற்றில் அவளது உள்ளங்கையின் குளிர்ச்சி.

"ஏங்... கோபமா?"

அவளது கனிந்த உதடுகளின் மென்மைச் சிலிர்ப்பு, மார்பில்.

"உங்களை மாப்பிள்ளையா அடையற துக்கு, நா எத்தனை ஜெம்மமா புண்ணியம் பண்ணுனேனோ..."

"அப்படியா...?"

"உங்க மனசு பூராவும் அன்புதான், பாசந் தான். நாந்தான் உங்களுக்கேத்த பொண்ணா இல்லே..."

"ஏன்?"

"நீங்க நெறைய படிச்சிருக்கீக. நெறைய சினிமா பாத்துருப்பீக. அதுகள்லே வர்ற புரு ஷன் பொஞ்சாதி சிரிச்சு விளையாடுறதைப் பாத்துப் பாத்து ஆசைப்படுதீக..."

"ம்."

"ஆனா... நா பட்டிக்காட்டுக்காரி. அம்மா காலடியிலே 'அடுப்பங்கரையே ஒலகம்'னு வளர்ந்துட்டவ. ரெண்டு ஆம்பளைக தெரு வுலே நின்னாக்கூட... அந்தப் பக்கமே தலை காட்டாம இருந்து பழகிப் போனவ. என்னால உங்க இழுப்புக்கு வர முடியலே."

"வரணும்னு நெனைக்கவாச்சும் செய்தியா?"

"நெனைச்சு என்னங்க செய்ய...? பெறவிக் கொணம்னு ஒண்ணு இருக்கே. மட்டை வைச் சுக் கட்டுனா... நேராகாதே..."

அவளது கண்ணீர்த் துளிகளின் வெது வெதுப்பை நெஞ்சில் உணர்ந்தான். "சரி சரி... அழாதே..." என்று சாந்தப்பட்ட மனசோடு அவள் முதுகை வருடினான். பெருமூச்சு நீள மாய் வெளியேற... விடிவிளக்கை அணைத் தான். கண்ணே போன மாதிரி, அப்பிக் கொண்ட இருட்டு. அவன் உடம்பும், மனசும், அவளை முழுமையாக உணர்ந்து திளைத்தது. இவளது கூச்ச சுபாவமே இவர்களுக்குள் ஒரு பிரச்னையாகும் என்று அப்போது அவர்கள் உணரவேயில்லை.

(தொடரும்)

● போர்ச்சுகல் நாட்டில் சிகரெட் லைட்டர் வைத்துக் கொள்ளக்கூட லைசென்ஸ் பெற வேண்டும்.
தகவல் : கீழ்ப்பனையூர் ஜெயா ஸ்ரீனிவாசன்

# வெற்றியை பிரதிபலிக்கும் நிலையான நிறங்கள்



**பாம்பே டையிங்**
**பள்ளிச் சீருடைத்**
**துணி வகைகள்**

வெற்றி வாகை சூட
என்றும் முன்னணியில் உள்ள
இந்துணிகள் நீடுகண்ட
சிறப்பம்சங்களைக் கொண்டுள்ளன...

**பாலியெஸ்டர் இணைந்த பள்ளிச்**
**சீருடைத் துணிகள்**

- துவைக்க மற்றும் உடுக்க எளிதானது
- நிறங்கள் மங்காது
- ஒவ்வொரு சலவைக்கும் பின்னும் புத்தம் புதிது போல் தோன்றும்
- சுருக்கங்கள் ஏற்படாது
- உங்களுக்குத் தேவையான நிறங்களில் கிடைக்கிறது

**பள்ளிப் பைகள்**

கான்வாஸ் மற்றும் நைலான் பள்ளிப் பைகள். மிடுக்கான நீள்வி மற்றும் தேவையேற்ப மாடல்களில் கிடைக்கிறது

**சாக்ஸ்**

தூய பருத்தி மற்றும் நைலான் சாக்ஸ்கள் பல்வேறு வண்ணங்களில் கிடைக்கிறது. வலைபோலப் பின்னப்பட்ட மற்றும் ரிப் டிசைன் கொண்ட சாக்ஸ்கள்.

அனைத்தும் உங்கள் அருகாமையிலுள்ள பாம்பே டையிங் ஷோரூமில் கிடைக்கின்றன.

SEASONS/BD/389 TAM

**பள்ளிச் சீருடைத் துணிகள், சாக்ஸ்கள் மற்றும் பள்ளிப் பைகள்**

**பாம்பே டையிங்**

என்னக்கா இன்னும் பிரச்சார ஞாபகத்திலேயே இருக்கீங்க...

அதெல்லாம் ஒண்ணுமில்லை! உனக்கு நானும் எனக்கு நீயும் இரண்டு பேர்தான் பாக்கின்னு காட்டறேன்...



1996 மே 19
தாது வைகாசி 6
மலர் : 54
இதழ் : 42

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## மக்களின் வெற்றி; தர்மத்தின் வெற்றி!

காலத்தால் அழியாத உண்மைகள் சில உண்டு. அவற்றுள் ஒன்று :

*தர்மத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்*
*தர்மம் மறுபடி வெல்லும்*

என்ற பாரதியின் வாக்கு. அது மீண்டும் சரித்திர உண்மையாகப் பதிவாகியிருக்கிறது.

தி.மு.கவுக்கான ஆதரவு அலையைக் காட்டிலும் அ.தி.மு.கவுக்கான எதிர்ப்பு அலையே தமிழக தேர்தல் முடிவுகளை நிர்ணயித்தது என்பதில் சந்தேகமில்லை. தேர்தல் பிரசாரங்களும் இந்த எதிர்ப்பு அலையை மையப்படுத்தியே நடத்தப்பட்டன.

அந்த எதிர்ப்பு அலையை வலுவடையச் செய்த திருப்புமுனையாக அமைந்தது காங்கிரஸ் அ.தி.மு.க. கூட்டணி அறிவிப்புதான்!

இந்தத் திருப்புமுனை தெய்வ சித்தத்தினால் நிகழ்ந்தது என்றே சொல்ல வேண்டும். எக்காரணத்துக்காக எடுக்கப்பட்ட முடிவாயினும் சரி, ராவ் எடுத்த அந்த முட்டாள்தனமான முடிவுதான் அதர்மத்துக்கான மரண அடியாக அமைந்தது. அவர் மட்டும் அப்படியொரு முடிவை எடுத்திராவிட்டால், தமிழக காங்கிரஸ் தொண்டர்கள் கொதிப்படைந்திருப்பார்களா? தமிழ் மாநில காங்கிரஸ் பிறந்திருக்குமா? தி.மு.க.வுடன் உறவும் ரஜினியின் ஆதரவும் அமையப்




பெற்றிருக்குமா...?

காங்கிரஸ், தி.மு.க.வுடன் கூட்டணி அமைத்திருந்தால் கூட அதற்கு இவ்வளவு பெரிய வெற்றியோ, அ.தி.மு.க.வுக்கு இந்த மாபெரும் தோல்வியோ கிடைத்திருக்காது.

ராவின் திருப்புமுனை முடிவுக்காக இறைவனுக்கு நன்றி சொல்லும் அதே சமயத்தில், தி.மு.க. - த.மா.கா. கூட்டணி பெற்றுள்ள வெற்றியை எந்தவிதத்திலும் குறைத்து மதிப்பிட்டு விட முடியாது. சமயோசிதத்துக்கும் உழைப்புக்கும் கிடைத்த வெற்றி அது. வெற்றிக்குக் கடுமையாக உழைத்த தி.மு.க. அடிமட்டத் தொண்டர்களும் ரஜினி ரசிகர்களும் பாராட்டுக்குரியவர்கள்.

அ.தி.மு.க., ராவ் காங்கிரஸின் பிரபலங்கள் கும்பல் கும்பலாகத் தோல்வியைத் தழுவினாலும் குறிப்பாக நால்வரது தோல்வி தனித்து நிற்கிறது.

முதலாவதாக, ஜெயலலிதாவின் தோல்வி - அது லஞ்ச - ஊழலுக்கும் அகம்பாவ - அலட்சியத்துக்கும் கிடைத்த தோல்வி.

இரண்டாவதாக, தங்கபாலுவின் தோல்வி - கூட்டணி விஷயத்தில் நரசிம்மராவின் மனத்தைக் கலைத்த சகுனித்தனத்துக்குக் கிடைத்த புறக்கணிப்பு அத் தோல்வி.

மூன்றாவதாக, குமரி அனந்தனின் தோல்வி - அடிமட்டத் தொண்டர்களின் உணர்வுகளை மதிப்பது போல் பாவனை செய்து, கடைசி நிமிஷத்தில் பல்டி அடித்த முதுகெலும்பின்மைக்குக் கிடைத்த சவுக்கடி அது.

நான்காவதாக, சேடப்பட்டி முத்தையாவின் தோல்வி - சட்டமன்றத்தில் ஜனநாயகத்தின் குரல்வளையை நெரித்த அக்கிரமத்துக்காக மக்கள் அளித்த அதிரடித் தீர்ப்பு முத்தையாவின்




தோல்வி.

தோல்வியுற்றவர்கள் பாடம் கற்கிறார்களோ இல்லையோ, வெற்றி பெற்று முதல்வராகியிருக்கும் கருணாநிதி அந்த வெற்றியையே ஓர் எச்சரிக்கையாகக் கொள்ள வேண்டும். புதிய அரசு நேர்மையாக, மக்கள் நலனை மனத்தில் கொண்டு செயல்படாவிட்டால் இதே போன்ற நிராகரிப்புதான் கிடைக்கும் என்ற எச்சரிக்கை!

கடந்த ஆட்சியைப் போலவே இந்த முறையும் சட்டமன்றத்தில் எதிர்க்கட்சி என்பதே இல்லை. தோழமைக் கட்சியே எதிர்க்கட்சியாகச் செயல்பட வேண்டிய கட்டாயம்! த.மா.கா. தன் பங்கைப் பொறுப்புடன் ஆற்றும் என்று ஏற்கெனவே மூப்பனார் கூறியிருக்கிறார். அந்த பொறுப்புணர்வை வரவேற்று ஒத்துழைக்கும் பக்குவம் தி.மு.க.வுக்கு முன்னெப்போதையும் விட இப்போது அதிகமாகத் தேவை.

கடந்த ஆட்சி விட்டுப் போயிருக்கும் நிர்வாகக் குருவி சிடுக்குகளை விடுவிக்க ஓரிரு மாத காலம் ஆகும். அதன் பிறகு தமிழகத்தை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்ல, தி.மு.க. தேர்தல் அறிக்கையில் கூறப்பட்டுள்ளதைப் படிப்படியாக நிறைவேற்றினாலே போதும். அவ்வாறு நிறைவேற்றவும் பழைய தவறுகள் மீண்டும் அரங்கேறாமல் தடுக்கவும், மும்முறை முதல்வராக இருந்துள்ள கருணாநிதியின் அனுபவமே அவருக்கு உதவும்.

தி.மு.க. - த.மா.கா. கூட்டணியை மலை போல் நம்பி, அதிகாரத்தை வழங்கியிருக்கிறார்கள் மக்கள்.

அந்த நம்பிக்கைக்குப் பாத்திரராகி சீரிய தலைமையின் மூலம் வழிகாட்ட புதிய முதல்வரை அழைக்கிறோம்; வாழ்த்துகிறோம்!



• மிக்கி மவுஸ் : தொண்டர்களின் உற்சாகம்....

**அண்ணா பல்கலைக் கழக வளாகம் (தென்சென்னை வாக்குகள் எண்ணப்பட்ட இடம்) :**

இறுக்கம் சூழ்ந்த மாலை ஐந்து மணி. இறுக்கம், கொளுத்திய வெயிலால் மட்டுமல்ல... லீடிங் விவரம் பற்றி தனியார் தொலைக்காட்சி களில் சகட்டுமேனிக்கு, ஆளுக்கொரு விதமாய் அவரவர் யூகங்களையே செய்திகளாகத் தந்து கொண்டிருக்க, நிஜ நிலவரம் அறிய பல்கலைக் கழக வாசலில் சில நூறு பொது ஜனம். (நிறையப் பேர் கட்சிக்காரர்கள்.) தவிர, நடேசன் ரோடு வாகனப் பயணிகள் வேறு நடுவழியில் வண்டிகளை நிறுத்தி "என்னாச்சு சார்?" என்று விசாரிக்க, "கவுண்டிங் நடந்துட்டிருக்கு" என்று ஒரே பதில்.

நிறைய போலீஸ்காரர்கள். வயர்லெஸ் கரகரக்கும் வண்டிகளுக்கு பதில் சொல்லிக் கொண்டும் காம்பவுண்டை நெருங்கும் கார், ஸ்கூட்டர், கால் நடையர்களைத் தடுத்து, திருப்பிக் கொண்டும். உள்ளே செல்ல முயன்ற ஓர் அ.தி.மு.க. வண்டியைக் கூட அவர்கள் நிறுத்தி திருப்பினார்கள்!

உள்ளே இருந்து வெளியே வந்த ஏஜெண்டுகளின் ஆட்கள் சிலர் மட்டும் "கவுண்டிங் இப்பத்தான் ஆரம்பிச்சிருக்கு" என்று நிஜம் சொல்ல, கூட்டம் மௌனமாக மாலைத் தாள்களில் முகம் புதைக்கிறது...

**மாலை ஆறுமணி – கிரீன்வேஸ் சாலை – ம.தி.மு.க. அலுவலகம்:**

சாஸ்திரத்துக்கு ஒரே ஒரு போலீஸ்காரர் காம்பவுண்ட் வாசலில் காது குடைந்து கொண்டிருக்க, ஈ, கொசு, தெரு நாய் கூட இல்லாமல் படு சுத்தமான சூழ்நிலை. தொண்டர்கள்? அனுதாபிகள்? வெறும் ஆர்வலர்கள்? ம்ஹூம்!

படு ஆச்சர்யம். அலுவலகத்தில் அதிக பட்சம் நாலைந்து ஊழியர்கள் மட்டும் அமைதியாக அவரவர் வேலையைப் பார்த்துக் கொண்டிருக்க, மாடியில் ஏழெட்டுப் பேர் குட்டி டீ.வி.யில் தூர்தர்ஷன் செய்தி பார்த்துக் கொண்டிருந்தார்கள். தி.மு.க. முன்னணியில் வருவதை வாசிப்பாளினி பாவங்களற்று சொல்லிக் கொண்டிருக்க, கமெண்ட் ஏதுமில்லா

# மக்களின் வெற்றி!



• அறிவாலயத்தின் முன்பு அலைமோதிய கூட்டம்

மல் வெறுமனே பார்த்துக் கொண்டிருந்தார்கள். நொடிக்கொரு டெலிபோன் மட்டும் நிலவரம் கேட்டு-சொல்லி வந்தபடிக்கு இருந்தது. யாரோ ஒரு தொண்டர் அழுதபடி "அண்ணே, நான் தீக்குளிக்கப் போறேன்" என்று புலம்ப, தைரியம்– ஆறுதல்– தன்னம்பிக்கை தரும்படியாகப் பேசி, வைக்கிறார் அலுவலக நிர்வாகி குருநாதன்.

ஆச்சர்யம்– ஒருத்தருக்கும் டென்ஷன் என்பதே இல்லாமல் இருந்தது. பத்திரிகைகளைப் புரட்டிக் கொண்டும் கதை பேசிக் கொண்டும் டீ சாப்பிட்டுக் கொண்டும் படு கேஷுவலாக இருந்தார்கள். விவரமே தெரியாத ஆள் யாராவது ம.தி.மு.க. அலுவலகத்துக்கு வந்தால், "இவங்க எலெக்‌ஷனில் நிக்கறாங்களா என்ன?" என்று நிச்சயம் கேட்டிருப்பார்கள்.

**மே-8. புதன் கிழமை மாலை. வாக்குகள் எண்ணப்பட்டு, 'லீடிங்' விவரம் வெளியாகிக் கொண்டிருந்த பரபரப்பான நேரம். முடிவுகளுக்காக நகம் கடித்துக் கொண்டு தவமிருந்த அரசியல் வி.ஐ.பிக்களின் அலுவலக– இல்ல ஏரியாக்களில் நமது நிருபர்கள் வலம் வந்தார்கள். அங்கே கண்ட உணர்ச்சிக் கொந்தளிப்பான சூழ்நிலையின் நேரடி ரிப்போர்ட் இங்கே...**

**பா**பநாசம் சிவன் சாலை. ஜனதா கட்சி அலுவலகம் ஆளில்லாமல் வெறிச்சோடிக் கிடக்க, லஸ் அவென்யூவிலுள்ள மூப்பனார் அலுவலகத்துக்குச் சென்றோம். மூப்பனார், சத்ய மூர்த்தி பவனில் இருப்பதாகச் சொன்



• வெற்றிச் செய்திகளின் போது...




• சத்தியமூர்த்தி பவன் : ஆரவாரத்துடன் தொண்டர்கள்



• ஸ்டாலின் : "எல்லா இடத்திலும் லீடிங்..."

"அகில இந்திய காங்கிரஸுக்கு நீங்கள் தலைவராக வருவீர்களா?"

"இப்போதும் நான்தானே தலைவராக இருக்கிறேன்?"

சோனியாவோடு பேசியது பற்றியோ, மத்தியில் தலைமை மாற்றம் பற்றியோ மூச்சு விட மறுத்து விட்டார். மோகனப் புன்னகை மட்டும்!

**லாயிட்ஸ் ரோடு – அ(ம்மா) தி.மு.க. அலுவலகம்:**

நிறைய போலீஸ்காரர்கள். கொஞ்சம் தொண்டர்கள்; முகத்தில் முகாரியுடன். டீ.வி. செய்திகளைக் கேட்டுக் கொண்டே, சிங்கிள் நம்பர் லாட் டரியில் வரிசையாகத் தோற்பது போல 'சே,சே' என்று தலையில் அடித்துக் கொண்டும் கண் கலங்கிக் கொண்டும். எழுத்தில் கொண்டு வர முடியாத அநாகரிக வார்த்தைகளால் ரஜினிக்கு லட்சார்ச்சனை நடந்து கொண்டிருந்தது ஒரு புறம். மறுபுறம் 'மினி பார்' ஒன்று திறந்து தாகம் தணித்தபடி, 'சட்டி சுட்டடா'.

ராயபுரத்தில் ஜெயக்குமார் பின்தங்கி விட் டதை ஜீரணிக்க முடியாமல் கதறிவிட்டார் ஒரு தொண்டர்.

"எவ்ளோ செஞ்சிருக்காரு! நன்றி கெட்ட ஜனங்க. கவுத்துட்டாங்களே!" என்று கூப்பிட் டுக் கூப்பிட்டுப் புலம்பினார்.

பெருந்தலைகள் ஒன்று கூட இல்லாமல் தொண்டர்கள் மட்டுமே இருந்தனர் இங்கே.

"மொபசல்ல ஜெயிச்சிருவோம் பாருங்க" என்று ஆளாளுக்கு நம்பிக்கை ஏற்றிக் கொண் டிருக்க, ஷோபனாரவி வந்து அதையும் கெடுத் தார். செய்திகளில் தென் மாவட்டங்களிலும் தி.மு.க., த.மா.கா. கூட்டணி முன்னணியில் இருப்பதைச் சொல்லவும் தோதாக, பர்கூரில் ஜெயலலிதா 820 வோட்டுக்களில் பின்தங்கி யிருப்பதை சன் டீ.வி. பார்த்த ஒருவர் வழி யோடு அறிவித்துப் போக- நிஜமாகவே சிலர் அழுதலைக் காணமுடிந்தது.

னார்கள்.

**மாலை ஏழு மணி– சத்யமூர்த்தி பவன்:**

அந்த மைதானம் அவர்களுக்கு ஒரு அஸெட்... திறந்த காற்றில் ஆயிரம் நாற்காலி போட்டு, விளக்கு வெளிச்சத்தில் பேப்பர் படித்துக் கொண்டும் ஒலி பெருக்கப்பட்ட டீ.வி. செய்திகளைக் கேட்டுக் கொண்டும் த.மா.கா. லீடிங் பற்றிச் சொல்லும் போதெல் லாம் உரக்கக் கைதட்டி ஆரவாரித்தும் கூடிக் கூடிப் பேசிக் கொண்டும் இருந்தார்கள்.

உள்ளே வரவேற்பறையில் த.மா.காங்கிரஸ் குட்டி தேவதைகளின் மீட்டிங். விநாயக மூர்த்தி, முக்தா சீனிவாசன், நிறைய மேக்-அப்புடன் ஜெயந்தி நடராஜன், ராஜ்மோகன் இன்ன பிறர். முகங்களில் முழு நிலா. முறு வலில் மின்னல் கீற்று.

அலுவலக நோட்டீஸ் போர்டில் குமரி அனந்தன், வாக்கு எண்ணிக்கையில் மூன்றா வது இடத்துக்குத் தள்ளப்பட்டதை மிகப் பெரிதாக எழுதி வைத்திருந்தார்கள். அதைப் பார்த்ததும் ஒரு கோஷ்டி ஓடிப் போய் சாலை யில் ஆயிரம்-வாலா பற்ற வைக்க, சன் டீ.வி. யின் சுபஸ்ரீ தணிகாசலம் அவசரமாக அதைப் படம் பிடித்துக் கொண்டார்.

பரபரப்பின் உச்சத்தில் ஹார்ன் அடித்தபடி மூப்பனார் கார் உள்ளே நுழைய, சுமார் ஐந் நூறு பேர் அவர் கூடவே பின் தொடர, ஆகா யம் பிளக்கும் 'வாழ்க' கோஷம்.

மூப்பனார் மிக ஜாலி மூடில் இருந்தார். கேட்ட கேள்விகளுக்கெல்லாம் கடிஜோக் பாணி பதில்கள். சில சாம்பிள் பாருங்கள்:

"கலைஞரிடம் 'டிரெண்ட்' பற்றிப் பேசினீர் களா?"

"நான் பேசித்தான் அவருக்குத் தெரிய வேண்டுமா?"

**இரவு ஒன்பதரை – கோபாலபுரம் கலைஞர் வீடு:**

தெருவில் போகிற, வருகிறவர்களெல் லாம் கலைஞர் வீட்டுக்குள் நுழைந்து விசாரித்துக் கொண்டிருந்தனர். வராந்தாவி லேயே ஒரு டேபிள் போட்டு, சுற்றி நாற்காலி களில் ஸ்டாலின், நடிகர் சந்திரசேகர், டைரக் டர் அமிர்தம், இன்னபிறர். சுற்றிலும் நல்ல கூட்டம். செல்லுலர்மற்றும் சாதா போன்களில் தொகுதிகள் நிலவரம் வந்தபடிக்கு இருக்க, வாழ்த்துக்களுக்கு நன்றி சொல்லியவாறே ஸ்டாலின் 'லீடிங்' எண்ணிக்கைகளைக் குறித்

துக் கொண்டிருந்தார்.

ஆயிரம் விளக்குத் தொகுதியில் ஏழாயிரம் வோட்டு லீடிங்கில் ஸ்டாலின் இருக்கிற விஷயத்தை செல்லுலர் தெரிவிக்க, அதை ஒரு தொண்டர் உரக்க ஒலிபரப்ப - விஸிலும் கை தட்டலும் உற்சாகக் குதியலும் உள்ளிருந்து தயாளு அம்மாளை வெளியே இழுத்து விட்டன.

''என்ன? என்ன?'' என்று அவருடன் கூடவே மகள் செல்வியும் பரபரக்க, விஷயம் சொன்னதும் துள்ளிக் குதிக்காத குறையாக சந்தோஷப்பட்டார் தயாளு அம்மாள்.

"ஆமா! எல்லா இடத்துலயும் நாமதான் லீடிங். எல்லா இடத்திலயும்!" என்று போனில் சொல்லிக் கொண்டே நம்மைக் கவனித்து முறுவலித்த ஸ்டாலினுக்கு வாழ்த்துச் சொல்லி வெளியே வந்து, போயஸ் கார்டன்.

**ந**ம்பமுடியாத ஆச்சர்யம். ஒரு சப்தம், கும்பல், கரை வேஷ்டி இல்லை. எப்போதும் நிறுத்தி விசாரிக்கும் செக்யூரிட்டி இல்லை. (அம்மா வீடு மாத்திட்டாங்களா?) மயான அமைதி. ஒரு முழு ரவுண்ட் சுற்றி வந்து ரஜினி வீட்டுக்குப் போனால், அங்கும் படு அமைதி. சத்யநாராயணன் கூட இல்லை! விசாரித்த செக்யூரிட்டியிடம் 'சும்மா நிலவரம் பார்த்து வர வந்ததா'கச் சொன்னதும் "எல்லா பிரெஸ் ஸும் வந்துட்டுப் போயிட்டாங்க. இன்னும் ரெண்டு மூணு பேர்தான் பாக்கி. தலைவர் ஊர்ல இல்லாத போது இங்க விசேஷம் ஏதுமில்லை" என்றனர்.

**இரவு பத்தரை - அண்ணா சாலை : அறிவாலயம்:**

**போ**க்குவரத்தை நிறுத்தி, திசை திருப்பி விடும் அளவுக்குக் கூட்டம்; உற்சாகம்; குதூகலம். வண்ண விளக்கு அலங்காரங்கள், வாண வேடிக்கைகள், அதிர்வேட்டு முழக்கங்கள். ஐயாயிரம் பேருக்கு மேல் அறிவாலயத்தை மொய்க்க, அன்னார் பசி, தாகம் தீர்க்கவென்று திடீரென்று கடைகள் பல முளைத்தன! தள்ளு வண்டி டீ, காப்பி, கூல்டிரிங்கஸ், வேர்க்கடலை வகையறா, வெற்றிலை பாக்கு, பீடி சிகரெட்டிலிருந்து கையேந்திபவன் பிரியாணி ஸ்டால் வரை விதவிதமான மக்கள் சேவையாளர்கள்!

முகப்பில் பெரிதாக ஸ்கிரீன் வைத்து சன் டீ.வி. ஒளிபரப்பிக் கொண்டிருக்க, ரஜினி, கலைஞர் படம்– பெயர் வரும் போதெல்லாம் காது பிய்ந்து போகுமளவுக்கு விஸில்!

பர்கூரில் ஜெயலலிதா பின்னணியில் இருக்கிறதாகச் செய்தி சொன்ன போது பவர் டான்ஸ் ஆடிக் கொண்டாடத் தொடங்கி விட்டார்கள்! மிக்கி மவுஸ் வேஷம் போட்டுக் கொண்டு, பொம்மை முகத்துடன் ஒரு கழகக்



**T.S.A. 4347 என்ற எண்ணுள்ள ஆட்டோவில் காணப்பட்ட வாசகம் :**

**'அன்று காந்தியைக் கொல்ல**
**ஒரு கோட்சே இருந்தான் ;**
**இன்று பலநூறு கோட்சேக்கள்...**
**ஆனால் காந்திதான் இல்லை.'**

**— காமேஸ்வரி**

●○●○●○●○●○●○●○●○●○●○●○

கண்மணி கொடிபிடித்து ஆடிக் கொண்டு போனார்.

மகிழ்ச்சியில் இன்னதுதான் செய்வது என்று புரியாமல் அவரவர் பித்தம் தலைக் கேறிக் குதிக்க, திடீரென்று மூப்பனார் வேறு அங்கே வந்து, கலைஞரைக் கட்டித் தழுவி, கைகுலுக்கி வாழ்த்த, கேட்க வேண்டுமா தொண்டர்களுக்கு? கொண்டாடித் தீர்த்துவிட்டார்கள்!

"இன்னிக்குத் தாங்க எங்களுக்கு தீபாவளி!" என்று உணர்ச்சிவசப்பட்டு தழுதழுத்தார் ஒரு தொண்டர்.

கூட்டத்தில், தி.மு.க-த.மா.கா.வின் இந்த அமோக வெற்றிக்கு மூலகாரணம். கலைஞரா, மூப்பனாரா, ரஜினியா என்ற மினி பட்டி மன்றம் ஆங்காங்கே நடைபெற்றது. (கட்சி ஆட்கள் இல்லை.)

"மூவரும் இல்லை; ஜெ.தான்!" என்று ஒரு போடு போட்டார் ஒரு சக பத்திரிகையாளர்.

நிஜம் வேறு.

'Money can't buy' என்று ரஜினி அந்தனை நம்பிக்கையுடன் சொன்னதை மக்கள் நிரூபித்திருக்கிறார்கள். அ.தி.மு.க.வின் கோட்டை என்று சொல்லப்பட்ட இடங்களிலெல்லாம் கூட மகத்தான சரிவு! அந்த வகையில் சந்தேகமே இல்லாமல் இது-

மக்களின் வெற்றி!

**- ஔரங்கசீப், ப்ரியன்**

அட்டை வண்ணப்படம், படங்கள்:
**பேஜர் கே. மூர்த்தி**

# சுஜாதா பக்கம்



தமிழ்ப் புத்தாண்டை அடுத்து டாக்டர் கலைஞர் அவர்களின் திருக்குறள் உரைநூலின் வெளியீட்டு விழா மேடையில் பல அறிஞர்கள் பேசினார்கள். ஜி.கே. மூப்பனாரும் கலந்து கொண்ட விழா. மறைமுகமான அரசியல் குறிப்புக்கள் பலவற்றால் பேச்சாளர்கள் பார்வையாளர்களைப் பரவசப்படுத்தினார்கள்.

கலைஞர் அடுத்த முதல்வராக வருவது ஏறக்குறைய நிச்சயமாகிவிட்ட நிலையில் இவ்வாறு திகட்டத் திகட்டப் புகழ்வது எதிர்பார்க்கக் கூடியதே. இதில் யார் தகுதிக்காகப் புகழ்கிறார்கள் யார் பதவிக்காக என்று பதம் பிரிக்கும் ஆற்றல் கலைஞருக்கு, குறள் படிப்பதால், நிச்சயம் இருக்கும்.

கலைஞர், தெய்வம் - இறைவன் பற்றிய தம் சொந்தக் கருத்துக்களுக்கு ஒவ்வாத குறட்பாக்களுக்கு சாமர்த்தியமாக உரை எழுதியிருக்கிறார். 'கடவுள் வாழ்த்து' 'வழிபாடு' ஆகிறது. தெய்வம் 'நம்மைவிட' அறிவில் மூத்த பெருந்தகையாளர் ஆகிறார். "தெய்வத்தான் ஆகாதெனினும் முயற்சிதன் மெய்வருத்தக் கூலி தரும்" என்கிற குறளுக்கு "கடவுளே என்று கூவி அழைப்பதால் நடக்காத காரியம் ஒருவர் முயற்சியுடன் உழைக்கும் போது அந்த உழைப்புக்கேற்ற வெற்றியைத் தரும்" என்ற உரை வியப்பும் திகைப்பும் தருகிறது.

ஆனால் திருக்குறளை ஒழுங்காகப் படித்து அதற்கு மிக நுட்பமான, சில சமயம் நம்மை பிரமிக்க வைக்கும் விளக்கங்கள் சொல்லக் கூடிய ஒருவர் இந்த மாநில முதல்வராக வருவது நம் அதிர்ஷ்டமே. நிச்சயம் குறளை கலைஞர் தமக்கும் வழிகாட்டியாக எடுத்துக் கொள்வார் என்று நம்பலாம். குறளில் எல்லாப் பிரச்னைக்கும் விடை இருக்கிறது. 'இறைமாட்சி' என்கிற அதிகாரம் ஒன்றே சாலும். அரசன் என்பதற்கு பதில் முதலமைச்சர் என்று கொண்டு விட்டால் முழுவதும் பொருந்தும். முழு அதிகாரத்தையும் பாருங்கள் (என் உரை).

1. படைகள், குடிமக்கள், பொருளாதாரம், மந்திரிகள், நட்பு, பாதுகாவல் இவை ஆறும் உள்ளவன் சிறந்த அரசன்.

2. அஞ்சாமை, தர்மம், அறிவு, ஊக்கம், இந்த நான்கும் குறைவில்லாமல் அரசர்களுக்கு இயல்பாக இருக்க வேண்டும்.

3. விழிப்புணர்வு, கல்வி, துணிச்சல் இம்மூன்றும் நீங்காமல் இருக்க வேண்டும்.

4. நல்ல அரசன் அறநெறியில் பிசகமாட்டான். அநியாயச் செயல்கள் செய்யமாட்டான். வீரத்தில் குறைபடாமல் மானத்துடன் இருப்பான்.

5. வழி வகுப்பது, சேர்ப்பது, காப்பது, பாதுகாத்ததை சரியாகப் பிரித்துச் செலவழிப்பது, இவைகளில் வல்லவன் அரசன்.

6. அரசனை எளிதாகப் பார்க்க முடியும். கடிந்து பேசமாட்டான். அவன் ஆட்சியை உலகம் புகழும்.

7. இனிமையாகப் பேசி, பொருளுதவி செய்து, காப்பாற்றவல்ல அரசன் விருப்பப்படி உலகம் அமையும்.

8. நீதி முறைப்படி மக்களைக் காப்பாற்றும் அரசனை தெய்வம் என்று போற்றுவார்கள்.

9. குறை கூறுவோரின் கசப்பான சொற்களைப் பொறுத்துக் கொள்வான். அவன் ஆட்சியில் மக்கள் விரும்பித் தங்குவார்கள்.

10. நிறையக் கொடுப்பான், கருணை உள்ளவன். பாரபட்சமற்றவன். மக்களைக் காப்பாற்றுகிறவன். இந்த நான்கு குணங்களும் உள்ளவன் சிறந்த அரசன்.

இதுபோல் 'பெரியாரைத் துணை கோடல், (அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை திறனறிந்தது தேர்ந்து கொளல்) 'செங்கோன்மை', (ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும் தேர்ந்துசெய் வஃதே முறை') கொடுங்கோன்மை' (நாடொறும் நாடி முறை செய்யா மன்னவன் நாடொறும் நாடு கெடும்), 'அமைச்சு' (தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச் சொல்லலும் வல்லது அமைச்சு), 'நாடு' (உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும் சேராதியல்வது நாடு) போன்ற அதிகாரங்களும் மிகப் பொருத்தமானவை.

"இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன் கண் விடல்" என்பதில் 'மானேஜ்மெண்ட்'டின் சாரமே இருக்கிறது. பொருட்பால் முழுவதிலும் ஒரு நல்லாட்சிக்கு உண்டான அத்தனை வழிமுறைகளும் உள்ளன.

வள்ளுவர் தெய்வத்தை நம்பினாரா, மறுபிறவியை நம்பினாரா, அவர் ஜைனரா, பெண்களை இழிவாகப் பேசினாரா போன்ற கல்லூரி வனாக ஆராய்ச்சிகளை விட்டு விட்டு, நடைமுறை வாழ்வுக்கு அதில் கிடைக்கும் அத்தனை ரத்தினங்களையும் பரீட்சை பண்ணிப் பார்க்க ஒரு வாய்ப்பு கலைஞருக்குக் கிடைத்திருக்கிறது. அதற்கான நீண்ட ஆயுள் பெறவும் திருக்குறளில் மருந்து உள்ளது! (அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல துய்க்க துவரப் பசித்து). நல் வாழ்த்துக்கள்!

(மீண்டும் அடுத்த வாரம்)

* டாக்டர் அபர்ணா துரைசாமி

* முருகப்பன்

**டாக்டர், எஞ்சினியர் போன்ற படிப்பை விட்டுத் தள்ளுங்கள். இன்றைக்கு எல்.கே.ஜிக்கு சீட் வாங்கவே கியூவில் நிற்க வேண்டியிருக்கிறது. அந்தக் காலத்தில் எப்படி சீட் வாங்கினார்கள் என்று சிலரைக் கேட்ட போது.....**




# ட்மிஷனா? ரொம்ப ஈஸி!

**டாக்டர் அபர்ணா துரைசாமி :**

என் அப்பா டாக்டர் என்பதால் சிறு வயதிலேயே எனக்கும் டாக்டர் ஆகும் கனவு. எனது பள்ளிப் படிப்பெல்லாம் உ.பி.யில். எம்.பி.பி.எஸ். சேருவதற்காகவே ப்ளஸ் டூவில் சயன்ஸ் குருப் எடுத்தேன். 68-ல் ஸ்கூல் படிப்பை முடித்துவிட்டு உ.பி.யில் Combined Pre Medical Testக்கும் டெல்லியில் Lady Hardinge Medical காலேஜுக்கும் மனு போட்டேன். இரண்டிலும் நுழைவுத் தேர்வுகள் எழுதி, இரண்டிலுமே தேர்ச்சி பெற்றேன். என்றாலும் நான் Lady Hardinge Medical காலேஜை தேர்ந்தெடுத்தேன். பணம் கட்டுவதென்பதும் பெரிய பிரச்னையில்லை. டெல்லி ஹாஸ்டலில் என் சாப்பாட்டுக்கான மாதச் செலவு ரூ. 150தான். கூடவே நூறு ரூபாய் ஸ்காலர்ஷிப்பாகக் கிடைத்தது. வருடத்துக்கு ரூ. 1500 தான் கட்டி

னேன் என்று நினைக்கிறேன். மொத்த செலவே பதினைந்தாயிரம் ரூபாய்க்குள்தான்! எனவே, பணம் கொடுத்து சீட் வாங்குவது, பேப்பரை துரத்துவது, பாஸ் செய்ய லஞ்சம் கொடுப்பதெல்லாம் நான் கேள்விப்படாத விஷயங்கள்!

### முருகப்பன் (ஜெமினி டீ.வி.) :

எனது சொந்த ஊர் சிதம்பரமாக இருந்தாலும் படித்து வளர்ந்ததெல்லாம் இந்த சென்னையில்தான். எனது தந்தைக்கு ஜாதகம் பார்க்கும் பழக்கமுண்டு. அதனால் எனக்கும், எனது சகோதரர்களுக்குமான தொழிலை, நாங்கள் செயின்ட் கேபிரியல் ஹைஸ்கூலில் படிக்கும் போதே முடிவு செய்து விட்டார். அதன்படி லயோலா கல்லூரியில் (70-ல்) பி.யூ.சி.யில் காமர்ஸ் குருப் எடுத்தேன்.

காமராஜ் திட்டப்படி பி.யூ.சி வரை எனக்கு செலவே இல்லை. அதன் பிறகு பி.காம். அதற்கும் இப்போது இருக்கும் அடிதடி அப்போது இல்லை. எனக்கு பச்சையப்பனில் சீட் கிடைத்தது. சேர்ந்தேன். பணம் கொடுத்து சீட் பிடிக்கும் நிலை அப்போது யாருக்கும் ஏற்படவில்லை. எனது சகோதரர்கள் டாக்டருக்குப் படித்த போது கூட சீட்டுக்காக சிரமப்பட வில்லை!

பிறகு, நான் சி.ஏ.வில் சேர்ந்தேன். அன்றிலிருந்து இன்றுவரை இந்தியாவிலேயே சி.ஏ.தான் செலவில்லாத படிப்பு. செலவும் கம்மி, மதிப்பும் அதிகம். பாஸ் செய்வது தான் கஷ்டம்!

• திருமதி சாந்தா மாதவ்





• சிவசங்கரன்

### திருமதி சாந்தா மாதவ் (குடும்பத்தலைவி) :

கடந்த 1959-ல் நான் எத்திராஜ் கல்லூரிக்கு திருச்சியிலிருந்து அப்ளை செய்தேன். இண்டர்வ்யூ அது இதுன்னு எந்தச் சடங்கும் கிடையாது. நேராக அட்மிஷன்தான்! பி.ஏ. இங்கிலீஷ் கிடைத்தது. ஆனால் நான் பி.எஸ்ஸி. கேட்டேன். பிரபல வழக்கறிஞர் வி.எல். எத்திராஜ் அவர்களே மாற்று உத்தரவைக் கையில் கொடுத்தார். அட்மிஷன் என்பது பெற்றோரைச் சிரமப்படுத்தாத அளவுக்கு அத்தனை சுலபமாக இருந்தது அப்போது!

### எம்.ஜெ. சிவசங்கரன் (ஓய்வு பெற்ற அதிகாரி) :

சுதந்தர போராட்டம் உச்ச கட்டத்தில் இருந்த சமயம் அது. எஸ்.எஸ்.எல்.சி. படித்ததும், ஜூனியர் இண்டர்மீடியட் படிக்க அன்றைய மவுண்ட் ரோட் ஆர்ட்ஸ் காலேஜுக்கும் பச்சையப்பன் கல்லூரிக்கும் அப்ளிகேஷன் போட்டேன். ஆர்ட்ஸ் காலேஜில் உடனே இடம் கிடைத்தது. என் வாத்தியார் கொடுத்த அறிவுரைப் படி நான் ஃபிசிக்ஸ்-கெமிஸ்ட்ரி-ஜுவாலஜி குருப் எடுத்துப் படித்தேன். ஜூனியர் இண்டர்மீடியட் முடித்த பிறகு சீனியர் இண்டர்மீடியட் படிக்க வேண்டும். ஆனால் என் குடும்பச் சூழல் காரணமாக நான் வேலைக்குப் போகும் நிலை ஏற்பட்டது. இன்று சென்னை எழும்பூரில் ராஜரத்தினம் ஸ்டேடியம் இருப்பது எல்லோருக்கும் தெரியும். ராஜரத்தினம், சென்னை மாநகரின் ஐ.ஜி.யாக இருந்தவர். நான் அவரிடம் நேரே சென்று வேலைக்குப் போக வேண்டும் என்று கூறினேன். 'உடனே சேர்ந்திடு' என்றார். உடனடியாக எனக்குக் கை ரேகை பிரிவில் 'தேடுனர்' வேலை கிடைத்தது. ஆக, அந்தக் காலத்தில் காலேஜ் அட்மிஷன் மாத்திரமல்ல; வேலையும் சிரமமில்லாமல் கிடைத்தது!

தொகுப்பு : **அஷோக்**

படங்கள் : **பேஜர் கே. மூர்த்தி**

A Balaji Group Financial Company




# பணம்

## முதலீடு

### நிரந்தர வைப்புத் திட்டம்

| காலம் | 45 நாள் | 3 மாதம் | 6 மாதம் | 1 வருடம் | 2 வருடம் அதற்கு மேலு |
|---|---|---|---|---|---|
| வட்டி விகிதம் | 15% | 16% | 17% | 19% | 20% |

### பென்ஷனர் நலத் திட்டம்

| வைப்புத் தொகை | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் |
|---|---|---|---|
| ரூ. 5000/- மும் அதற்கு மேலும் | 20.5% | 21% | 21.5% |

* வட்டிக்கான காசோலை எல்லா மாதங்களுக்கும் முன்னதாகவே ஒவ்வொரு ஆண்டும் அளிக்கப்படும்



### ராஜயோகம் முதலீடு திட்டம்

**21%**

முன்தேதியிடப்பட்ட காசோலைகள்
மாதாந்திர வட்டிக்கு வழங்கப்படும்.
குறைந்தபட்ச முதலீட்டுத் தொகை ரூ. 20,000/-
குறைந்தபட்ச காலம் 5 வருடம்.

**உங்கள் வைப்புத் தொகை**
**42 மாதங்களில் இரட்டிப்பாகிறது.**
**66 மாதங்களில் மும்மடங்காகிறது.**

**வீடு மற்றும் தங்க நகை மீது**
**விரைவான கடன் வசதி.**

தமிழ்நாடு மையங்கள்:

பதிவு அலுவலகம்:- ★ "கோகலே பவன்", 8, வெஸ்ட்காட் ரோடு, இராயப்பேட்டை, சென்னை-14. போன்: 831180, 846445, ஃபேக்ஸ்: (044) 830037.

கிளைகள்: ★ "பார்க் சென்டர்", 14/1, வெங்கடநாராயணா ரோடு, தி.நகர், சென்னை-17. போன்: 4346137, 4343703 ★ 4, துரைசாமி ரோடு, தி.நகர், சென்னை-1 போன்: 4345845. ★ 189, N.S.K. சாலை, (ஆற்காடு ரோடு, வடபழனி, சென்னை - 26. போன்: 4857739 ★ 24, சி.வி.ராமன் ரோடு, ஆழ்வார்பேட்டை சென்னை-18. போன்: 4993813 ★ 195, N.S.C. போஸ் ரோடு 2வது தளம், (பூக்கடை எதிரில்) சென்னை - 1. போன்: 583810, 583811

சேலம்: ★ 5/250, ஜங்ஷன் மெயின் ரோடு, சேலம் - 636 005. போன்: 445477 ஈரோடு: ★ C.D. பில்டிங்ஸ், 77, பூங்கா தெரு, ஈரோடு - 638 003. போன்: 223690 திருப்பூர்: ★ 7, ஈஸ்வரன் கோவில் தெரு, திருப்பூர் - 641 604. போன்: 705087.

பாண்டிச்சேரி: ★ 167, வைசால் தெரு, பாண்டிச்சேரி, போன்: 40617. மற்றும் மதுரை, திருச்சி, கோயம்புத்தூர், கரூர், கும்பகோணம், மயிலாடுது

★ வரவு, செலவுகள் பங்குதாரர்களுக்கு மட்டுமே.

**தங்கள் முதல் செல**

# குறையொன்றுமில்லை

## 1

**ய**முனை நதி புண்ணியத்தைத் தேடிக் கொண்டது; கோதாவரியோ களங்கத்தைத் தேடிக் கொண்டது! எப்படி என்கிறீர்களா? 'தூய பெருநீர் யமுனைத் துறைவனை...' என்று பாடிய ஆண்டாள், கண்ணனுடைய அவதார காலத்தில் உபகாரம் பண்ணின யமுனை நதிக்கு நற்சான்றிதழ் தருகிறார். என்ன உபகாரம்...?

வசுதேவர் கண்ணனைத் தூக்கிக் கொண்டு நந்த கோகுலத்துக்குப் போகையில், அவர் கேட்காமலே இடுப்பளவுக்கு வடிந்து வழி விட்டது அந்த யமுனா நதி. புண்ணியத்தை, தூய்மையைத் தேடிக் கொண்டது.

ஆனால் கோதாவரி நதியோ களங்கத்தைத் தேடிக் கொண்டது! எப்படி...? ஸ்ரீ ராமாவதாரத்தின் போது ராவணன் சீதாபிராட்டியை அபகரித்துப் போகிறான். அப்போது பிராட்டி கதறி அழுகிறார்: "ஹே, கோதாவரி! நீயும் பெண், நானும் பெண்... எனக்கு நேரும் துன்பத்தை இப்படி நீ பார்த்துக் கொண்டிருக்கியே...? என் பர்தா வந்து என்னைத் தேடுவார். அப்போதாவது சொல்லு, ராவணன் என்னை அபகரித்துப் போனான் என்று தவறாமல் சொல்லு..."

ராமன் வந்து தேடியபோது, 'சீதையைக் கண்டீர்களா?' என்று மரம் மட்டையையெல்லாம் கேட்ட போது, கோதாவரி பதிலே சொல்லவில்லையாம்... ஒரு அலை கூட அடிக்கலை! ராவணனிடம் இருந்த பயத்தினால் பேசாமல் இருந்து விட்டாள்!

உண்மை தெரிந்தவர்கள், உரிய சமயங்களிலே அதைச் சொல்ல வேண்டும் - வெளிப்படுத்த வேண்டும். அப்படியில்லாமல் 'நமக்கு அதில் நேரடி சம்பந்தமில்லை'ன்னு வாய் பொத்தி இருந்துட்டா களங்கம் வந்துடும். அப்பேர்ப்பட்ட களங்கம்தான் கோதாவரிக்கு ஏற்பட்டது.







திரேதா யுகத்திலே கோதாவரிக்கு ஏற்பட்ட இந்தக் களங்கம் கலியுகத்திலே தீர்ந்து போயிற்று... எப்போது தீர்ந்தது என்று கேட்டால், ஸ்ரீவில்லிபுத்தூரிலே ஆண்டாள் பிறந்தப்போ, பெரியாழ்வார் அந்த தெய்வக் குழந்தைக்கு 'கோதா' (கோதை) என்று பெயர் வைத்தாரே... அப்போது தீர்ந்தது கோதாவரியின் களங்கம்!

இந்தக் கதையைச் சொல்லி அடியேன் ஆரம்பிக்கறதுக்கு ஒரு காரணம் இருக்கு... 'நாம சாம்யம்' – 'பெயர் ஒற்றுமை' என்கிறதன் பெருமை நேயர்களுக்குப் புரிய வேண்டுமில்லையா...! அதனால் சொன்னேன்.

நம் குழந்தைகளுக்கும் தெய்வீகத் திருப்பெயர்களைச் சூட்டுவது இந்த 'நாம சாம்யம்' கருதித்தான். பெயர் சூட்டப்படுபவர்களுக்கும் ராமா, கிருஷ்ணா என்று அந்தப் பெயர்களைச் சொல்லி அழைப்பவர்களுக்கும் ஒருசேர நன்மைகள் உண்டாகும் என்றுதான்.

'பாகேயம் புண்டரீகாட்ச நாம சங்கீர்த்தனாம்ருதம்' என்கிறது கருட புராணம். 'பகவானின் கல்யாண குணங்களைச் சொல்லும் திருநாமங்கள் ஒரு 'மூட்டை' என்று இதற்கு அர்த்தம்!

'மூட்டை என்றால் சமையல்லவா...?' என்று யோசிக்கக் கூடாது! பூர்வகாலத்தில் ஊர் விட்டு ஊர் செல்பவர்கள் நடந்துதான் போவார்கள். கையில் ஒரு மூட்டையை எடுத்துப் போவார்கள். கட்டு சாத மூட்டை! வழியிலே குளக்கரையிருக்கும். மரத்தடியில், குளக்கரையில் மூட்டையைப் பிரித்து வைத்துச் சாப்பிடுவார்கள். களைப்பும் தீரும்; போய்ச் சேர வேண்டிய இடத்துக்கும் போய்ச் சேரலாம்.

வாழ்க்கை என்கிற பயணத்துக்கான கட்டுச்சாத மூட்டைதான் புண்டரீகாட்ச நாம சங்கீர்த்தனாம்ருதம். சிரமத்தை, களைப்பை, அலுப்பைப் போக்கும் மூட்டை. பெரியாழ்வார் சொல்கிறார் பாருங்கள் :

'நினைத்திருந்தேன் சிரமம்
தீர்ந்தேன் நேமி நெடியவனே...'

பகவானை எண்ணிக்கொண்டே நாம சங்கீர்த்தனம் பண்ண வேண்டும். சங்கீர்த்தனம் என்றால் இடைவிடாது எப்பவும் சொல்லிண்டேயிருப்பது என்று பொருள்.

இடைவிடாது சொல்கிற அளவுக்கு

அப்படி என்ன பெருமையிருக்கிறது...? ஏன் சொல்ல வேண்டும்? என்று தர்க்கம் பண்ண லாம். நமது ஹிந்து மதத்துக்குப் பரம ப்ரமாணம் வேதம் தான். பக்தி, ப்ரபதி, சரணாகதி, கர்ம யோகம், ஞானயோகம் - எல்லாம் வேதத் தில் உள்ளவைதான். பகவானே கூட அந்த வேதத்தைத்தான் மேற்கோள் காட்டிச் சொல் றார் :

ஏகாதசி தினம். ஸ்ரீரங்கத்தில் ரங்கநாதருக்கு ஈரவாடை சேவை. ஆபரணங்களையெல்லாம் களைந்துவிட்டு வெறும் துளசி மாலை அணிவித் திருக்கிறார்கள். ஈரம் படிந்த வஸ்திரம் திருமேனி யில் கிடக்கிறது. கற்பூர ஹாரத்தி நடக்கிறது. கொள்ளமாளா இன்ப வெள்ளமாய் - ஆச்சர்ய மாய் தோற்றமளிக்கிறார் பகவான்.

அப்போது ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக் கும் பெரிய சண்டையே வந்ததாம். 'நான் சுதந் திரன்' என்று வாதாடியதாம் ஜீவாத்மா. 'இல்லை நீ எனக்குக் கட்டுப்பட்டவன்' என்றான் பகவான். 'எதுனால அப்படிச் சொல்கிறாய்...?' என்று எதிர்த்துக் கேட்டதாம் ஜீவாத்மா.

இந்தச் சமயத்திலே பகவான், 'நான் சொல் றேன்... அதனால் நீ என் அடிமை' என்று பதில் சொல்லல்லை...

'வேத மூலம் ப்ரமாணாது...' என்று பதில் சொல்கிறார்! அதாவது, 'வேதத்தின் மூலமான ஓம்காரத்தை ஆராய்ந்தால் உன் எதிர்க் கேள்விக் குப் பதில் கிடைக்கும்' என்று சத்தியம் பண்ணு கிறார். ஈர ஆடையிலிருந்து ஜலம் சொட்டச் சொட்ட சத்தியம் பண்ணுகிறார்!

'நான்' என்ற சப்தமே ஒலிக்காமல், அந்த பெரு மானே 'வேதத்தில் பதில் தேடு' என்று சொன்ன தன் மூலம் வேதத்தின் உயர்வைப் புரிஞ்சுக் கணும். அவனையும் நம்மையும் சேர்த்து வைக் கிறது அந்த வேதம்தான்.

அப்பேர்ப்பட்ட வேதத்திலே... திருநாம வைபவம் பற்றிச் சொல்லியிருக்கிறதா...? திவ்ய மாய்ச் சொல்லியிருக்கிறது! நம்மைப் பார்த்து ரொம்ப ஆதரவாக அந்த வேதம் சொல்கிறது :

**பகவான் கட்டிப் பொன் போலே...**
**அவன் திருநாமம் ஆபரணங்களைப் போலே...**

கட்டிப் பொன் மிக உசத்தியானதுதான். ஆனால் அதைத் தலையில் வைச்சுக்க முடியுமா? கழுத்திலே போட்டுக்க முடியுமா? அல்லது முதுகிலே தாங்கிக் கொண்டு நிற்கத்தான் முடி யுமா?

ஆனால் பகவானின் திருநாமங்களோ உடனே எடுத்தாளக்கூடிய ஆபரணங்கள். அணிந் தும் அணியச் செய்தும் மகிழலாம்; அழகு பார்க்க லாம்.

பிள்ளைலோகாச்சார்யார் தமிழில் மூன்று அழகான சூத்திரங்கள் மூலம் இந்த வேதப் பொருளை விளக்குகிறார் :

**'வாச்ய பிரபாவம் போலன்று வாசக பிரபாவம்'**

வாச்யன் - பகவான்; வாசகம் - அவன் நாமம். பகவான் கைவிட்டாலும் விட்டுவிடு வான்; ஆனால் அவன் நாமம் கைவிடாது'...

**'அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டி நின்று உதவும்'**

'ஹே விஷ்ணு! இதை ஏற்றுக் கொள்' என்று சொல்லி ஹோமம் பண்ணுகிறோம். அவன் எங்கே வேண்டுமானாலும் இருக்கட்டுமே; அவன் பெயரைச் சொல்லி அளிப்பது அவனுக் குப் போய்ச் சேருகிறது.

**'திரௌபதிக்கு ஆபத்திலே ஆடை சுரந்தது கோவிந்த நாமமிலே'**

வஸ்திர அபஹரணம் நடக்கும் போது திரௌ பதி கூப்பிடுகிறாள் : 'ஹே கிருஷ்ணா... ரக்ஷமாம் சரணாகதாம்...' என்று. ஆனால் பகவான் அவளை ரக்ஷிக்கவில்லை... இதை அந்த பக வானே சொல்கிறார் :

"ஒவ்வொரு அவதாரத்திலும் ஒரு குறை உண்டு... கிருஷ்ணாவதாரத்திலே திரௌபதியை உடனடியாக ரக்ஷிக்காதது என் குறை...' என் கிறார்.

'திரௌபதிக்கு ஆடை சுரந்ததே.... உன்னை லன்றி வேறு யாரால் அது சாத்தியமானதாம்...' என்று கேட்டால் பகவான் சொல்கிறார் :

'நானில்லை; என் கோவிந்த நாமம் அவளை ரக்ஷித்தது....'

அதனால்தான் ஆண்டாள் பாடினாள். 'இப்படியெல்லாம் குறைப்பட்டுக் கொள்கிறாயே, உன்னிடம் கூட குறை என்பது இருக்குமா?' என்று அர்த்தமாகும்படி, திருப்பாவையில் -

'குறையொன்றுமில்லாத கோவிந்தா' என்று அவனை அழைத்தாள்.

'கோவிந்தா' என்கிற நாமம் இருக்கும்போது உனக்குக் குறை இல்லை. உன்னை ஆச்ரயிக்கிற வர்களுக்கும் குறையில்லை...' என்றாள்.

பகவானின் நாமமே நம்மை ரக்ஷிக்கும். அவனை விட நம்மிடம் அதிக பரிவுடையது அவன் நாமம்.

'எல்லாம் சரிதான்; இப்படி இடைவிடாது கோவிந்தா என்று சங்கீர்த்தனம் பண்ணிக் கொண்டிருந்தால் உலகக் கடமைகளைச் செய்ய வேண்டாமா...?' 'அவனுடைய பல நாமங்கள் சம்ஸ்கிருதத்தில் உள்ளனவே... வாயிலே நுழைய வேண்டாமா?' - இப்படி நியாயமான சந்தேகங் கள் பல பேருக்கு வரத்தான் செய்யும்...

அவற்றுக்கான பதில்களை அடுத்த வாரத் திலே பார்ப்போம்...



# மன்றாடும் இங்கிலாந்து!

ஞாயிற்றுக் கிழமைகளில் ஆங்கிலேயர்களுக்கு மாதா கோவிலுக்குப் போவது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம், மாட்டிறைச்சி உண்பது! அது இல்லாத ஞாயிறு உணவை அவர்களால் கற்பனைகூட செய்து பார்க்க முடியாது.

ஆனால் இப்போது நிலைமை தலைகீழ். 'பீஃப்' என்றாலே காத தூரம் ஓடுகிறார்கள் மக்கள். இங்கிலாந்தில் மட்டும் அல்ல, ஐரோப்பா முழுவதுமே இந்த நிலைதான்.

என்ன ஆயிற்று?

'கிரியூட்ஸ் ஃபெல்ட் - ஜேகப் வியாதி' என்று ஒரு வியாதி. சுருக்கமாக சி.ஜெ.டி. (C.J.D.) மூளையைப் பாதித்துவிடும் நோய். இந்த நோய் வந்தால் மனிதனுக்குப் பைத்தியம் பிடிக்கும்.

சில வாரங்கள் முன்பு பன்னிரண்டு இளம் நோயாளிகள் பரிசோதனைக்கு வந்தபோது அவர்களுக்கு இந்த வியாதி இருப்பதை டாக்டர்கள் கண்டு பிடித்தார்கள். புது விதமான நோய். ஏன் எப்படி என்று மண்டையைப் போட்டு உடைத்துக் கொண்டார்கள். காரணம் கண்டார்கள்.

அறிக்கை வெளியிட்டார்கள்.

"BSE வியாதியால் பாதிக்கப்பட்ட மாடுகளின் இறைச்சியை இவர்கள் சாப்பிட்டதால் ஏற்பட்ட விளைவாக இது இருக்கலாம்."

அவ்வளவுதான். ஐரோப்பா முழுவதும் இந்த அறிக்கை காட்டுத் தீயானது. மாடுகளைப் பார்த்தாலே மக்கள் மிரண்டார்கள்.

என்ன அது BSE வியாதி?

கொஞ்சம் பின்னோக்குவோம்.

"பொவைன் ஸ்பாஞ்சிஃபாம் என்ஸெஃபலோபதி" (Bovine Spongiform Encephalopathy) என்பதன் சுருக்கமே BSE. மாடுகளின் மூளையைப் பஞ்சுபோல சிதைத்துவிடும் கொடிய வியாதி. இந்த வியாதி இருந்தால் மாடுகளுக்கும் ஒருவகை பைத்தியம் பிடிக்கும். கடந்த பத்து ஆண்டுகளில் கிட்டத்தட்ட ஒன்றரை லட்சம், பிரிட்டிஷ் மாடுகள் BSEயால் இறந்து போயின.

1980 களில் ஒரு கிறுக்குத்தனம் நடந்ததை இங்கே குறிப்பிட வேண்டும்.

மாமிசத்துக்காகப் பயன்படுத்தப்படும் மாடுகளைக் கொழுக்க வைக்க வேண்டும் என்பதற்காக மூளை மற்றும் முதுகெலும்பு பாதிக்கப்பட்ட ஆடுகளின் பயன்படாத உடல் பகுதிகளை மாட்டுத் தீவனமாக்கி மாடுகளுக்குக் கொடுத்தார்கள். தங்களுக்குத் தரப்பட்டது மோசமான - மலிவான ஒரு உணவு, அதனால் பின்னாளில் அபாயம் வரும் என்பதை உணராத மாடுகள் அந்த உணவை ஏற்றுக் கொண்டன.

இப்படிப்பட்ட உணவை உட்கொள்ளும் மாடுகளுக்கு, சில வருடங்களில் BSE வியாதி வரும் என்பதைக் கண்டு கொண்ட விஞ்ஞானிகளின் கண்டிப்பால் '87-ல் அந்த ஆட்டு ணவை அரசாங்கம் தடை செய்து விட்டது. என்றாலும் கூட விளைவுகள் மோசமாகிப் போயின.

அந்த மாடுகளுக்கு BSE வியாதி வரத் தொடங்கியது. "இந்த வியாதி மனிதர்களைப் பாதிக்கும் வாய்ப்பே இல்லை" என்று அடித்துக் கூறி வந்த மருத்துவர்கள், சமீபத்தில் அந்த பன்னிரண்டு நோயாளிகளைப் பரிசோதித்தபின் 'பல்டி' அடித்து விட்டார்கள்.

மாட்டின் BSE வியாதியே மனிதனுக்கு சி.ஜெ.டியாக விளைந்திருக்கிறது என்றார்கள்.

'இங்கிலாந்து நாட்டின் மாட்டிறைச்சி எங்கள் மண்ணைத் தொடவே கூடாது' என்று ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் தடை விதித்தன. இங்கிலாந்து மக்களும் மாட்டிறைச்சியைத் தொட மறுத்தார்கள். பிரிட்டிஷ் ஏர்வேஸ், வர்ஜின் அட்லாண்டிக் விமான கம்பெனிகள் தங்கள் விமான சேவையில் பயணிகளின் உணவுப் பட்டியலிலிருந்து மாட்டிறைச்சியை அவசரமாக நீக்கின.

இங்கிலாந்தின் பதினையாயிரம் கோடி ரூபாய் மாட்டிறைச்சி வர்த்தகம் படுத்துப் போயிற்று. ஐந்து லட்சம் தொழிலாளர்களின் வாழ்வு சூன்யமாகி விடும் நிலை.

'நீங்களெல்லாம் பயப்படுகிற மாதிரியெல்லாம் இல்லை. இந்த வியாதி வரும் வாய்ப்புள்ள மாடுகள் அனைத்தையும் அடையாளம் கண்டு கொன்று விடுகிறோம். வியாதியற்ற மாடுகளுக்கு உத்தரவாதம் தருகிறோம். தயவு செய்து தடையை நீக்கி விடுங்கள்' என்று இங்கிலாந்து மற்ற ஐரோப்பிய நாடுகளிடம் மன்றாடிக் கொண்டிருக்கிறது.

— ராணிமைந்தன்

# ஜில் ஜோக்ஸ்


"உங்க கர்ச்சீப்
காணோம்னு சொன்னீங்க
இல்லை?"


"இவங்க எல்லாம் ரொம்ப
அதிகமா டீ.வி. பார்க்கிறாங்க
போலிருக்கு..."


டிரைவர் :
ட்ரெயின்
நின்னுடுச்சு.
எல்லாம்
இறங்கித்
தள்ளுங்க."
- குல்ஷா


"நத்திங் டு ஓர்ரி.
சிம்லாவில் இந்த
வருஷம் பனி கொஞ்சம்
ஜாஸ்திதான்."

ஆயிரம்தான் சொல்லு. இயற்கை அழகுன்றதே அலாதிதான்!

- குல்லு






● என். கோபாலகிருஷ்ணன், திருச்சி - 2.

*? 'ரஜினிதான் முதல்வர்' என்றால் தமிழக மண்ணில் யாரும் அதை எதிர்க்கமாட்டார்கள் என்று ப. சிதம்பரம் கூறியுள்ளாரே...?*

! நன்றி உணர்ச்சி காரணமாக சிதம்பரம், மூப்பனார் இருவருமே கொஞ்சம் 'ஓவரா' பேசுறாங்க.. ரஜினி இதனாலெல்லாம 'கிர்' அடிக்காமல் இருந்தால் சரி.

● தீபா, பாளையங்கோட்டை.

*? 'கணிப்புகள் பற்றி கவலையில்லை' என்று ஜெ. பேசியிருக்கிறாரே...?*

! வெள்ளம்தான் தலைக்கு மேல போயிடுச்சே... தேர்தல் முடிவுகள் பற்றியும் கவலைப்பட அவசியமில்லாத நிலைதான் அவருடையது!

திட்டமிடல்

● க.கு.வே. சித்திரவேலு, கருப்பம்புலம்.

*? ரஜினி கலைஞர் பக்கம் இருக்கிறதுக்கும், வாலி-சுக்ரீவன் சண்டையில், சுக்ரீவனுக்கு ராமன் மறைந்திருந்து உதவியதற்கும் வேறுபாடு இல்லை என்று 'தமிழ் அரசி'யில் ஒப்பீடு செய்துள்ளார்களே....?*

! இது வாலி வதம் அல்ல; தாடகை வதம்! ரஜினி நடத்தியது பகிரங்க தாக்குதல்.

● பி. ஜெயப்பிரகாஷ், சேத்துமடை.

*? தேர்தலுக்குப் பிறகு 'ஜெ'விடமிருந்து அ.தி.மு.க.வைக் கைப்பற்றப் போவதாக ஆர்.எம்.வீ. கூறியிருப்பது குறித்து....?*

! ஊழலில் மிதந்து தேர்தலில் தோற்ற அமைச்சர்களை உள்ளடக்கியா, இல்லையா?... விளக்கம் தேவை.

● இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை...

*? மக்களவை தேர்தலுக்குப் பின் காங்கிரஸ் கட்சித் தலைமையில் மாற்றம் இருக்கும் என்று ப. சிதம்பரம் பேசியிருக்கிறாரே...?*

! சம்பவங்களும் அறிக்கைகளும் அப்படியொரு மாற்றம் வர வாய்ப்பு இருப்பதையே உணர்த்துகின்றன. ராவ் கண்ணியமாக விலகிக் கொண்டால் காங்கிரஸ் உள்ளடங்கிய கூட்டணி ஆட்சி அமைய வாய்ப்பு உண்டு.

● டி. செல்வன், நெல்லையப்பபுரம்.

*? எம்.ஜி.ஆரின் ஸ்பெஷாலிடி மனித நேயம், வள்ளல்தன்மை; கலைஞரின் ஸ்பெஷாலிடி அயராத உழைப்பு, சாணக்கியம்; ரஜினியின் ஸ்பெஷாலிடி.....?*

! தமிழ்நாடு அளவில் கிங் மேக்கர்!

● வி. அர்ஜுன் குமார், கோவை.

*? பதவியில் இல்லாதபோது ஜெயலலிதா மக்களுக்கு எப்படி தொண்டு செய்யப் போகிறார்?*

! கடவுளே! செய்த தொண்டு போதாதா... அரசியலுக்கு 'குட்பை' சொல்லுவதே அவருக்கு நல்லது.

● எஸ். அருள்மொழி, காட்டூர்.

*? ஜெயலலிதா எதிர்ப்பு அலை என்னும் பயிரை உருவாக்கியவன் நான், ஆனால் பிரதாகதார்களான மூப்பனாரும் கருணாநிதி*

# ரஜினியின் ஸ்பெஷாலிடி என்ன?

*யும் அறுவடை செய்கிறார்கள் என்கிறாரே சு. சுவாமி?*

! சு. சுவாமி விதை தூவியிருக்கலாம்; உரம் போட்டு, நீர் பாய்ச்சி, களை எடுத்து, பூச்சி மருந்து தெளித்துப் பாடுபட மற்றவர்களும் தான் முன் வந்தார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக, ஜெயலலிதாவே தமது ஒவ்வொரு நடவடிக்கையினாலும் அந்த எதிர்ப்பை வளர்த்து வந்தார்.... அதுவே அனைவருக்கும் அனுகூலமாய் அமைந்தது.

● **ஆர். சந்திரபிரசாத், சென்னை - 19.**

*? சென்னை நகரச் சாலைகளில் நிறுத்துக் கோட்டைத் தாண்டினால் உடனடி அபராதம் ஐம்பது ரூபாய் - ஆனால் அனேகர் இந்த விதியைக் கடைப்பிடிப்பதில்லை... இது ஒரு நடைமுறைக்கு வராத அறிவிப்பா....?*

! மாசக் கடைசியில் போக்குவரத்துப் போலீஸுக்குக் கூடுதல் வருவாய் தேடித் தரும் விதி! கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆட்சிக்கு வந்த பிறகாவது நிலைமை மாறினால் சரி....!

● **வை. சண்முகவேல், விழுப்புரம்.**

*? ரஜினியின் நேபாள பயணம் குறித்து...?*

! திட்டமிட்டுத்தான் செயல்படுகிறார். தேர்தல் பிரசாரத்தில் நேரடியாகக் கலந்து கொள்வதைத் தவிர்த்து அமெரிக்கா போனார்; தேர்தல் நெருங்க, டீவி. மூலம் புத்துணர்ச்சி ஊட்ட இங்கு இருந்திருக்கிறார். தேர்தல் முடிவுகள் முழுமையாக வெளிவரும் நேரத்தில் பங்களூரிலும் நேபாளத்திலும் இருக்கிறார்! புத்திசாலித்தனம்!

● **டி.வி.எஸ். பாலு, சித்தமல்லி.**

*? டெல்லியில் தமிழனின் குரல் ஒலிக்க, தங்களுக்கு வாக்களிக்கும்படி கேட்டார்களே தமிழ் மாநில காங்கிரசினர்... இதற்கு முன்பெல்லாம் டெல்லியில் தமிழனின் குரல்....?*

! ஒடுக்கப்பட்டு வந்தது!

● **ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.**

*? அமலாக்கப் பிரிவு ஹைதராபாத்தில் நுழைய முடியாதா...?*

! எங்கு வேண்டுமானாலும் நுழையலாம் - மனமிருந்தால்; மேலிட உத்தரவும் கிடைத்தால்...

● **ஜி. கருணாகரன், கடலூர்.**

*? கல்வியின் தலையங்கத்துக்கெல்லாம் ரஜினி செவி சாய்க்கிறாரே எப்படி...?*

! தமிழக மக்கள் செய்த புண்ணியம் அது! தொடர்ந்து செவி சாய்க்க, அவரைச் சுற்றியுள்ளவர்கள் அனுமதிக்க வேண்டும்.



• கவலையேயில்லை!

● **வி. சத்தியப்ரியன், சென்னை - 15.**

*? ம.தி.மு.கவுக்கு முடிவுரை எழுத முடியாது என்று வை. கோபால்சாமி கூறியுள்ளது பற்றி...!*

! அவர் எழுதுகிறாரோ இல்லையோ... வாக்காளர்கள் எழுதி விட்டார்கள்!



• விதை மட்டும்!

● **என். சி. ராஜேந்திரன், சின்ன சேலம்.**

*? இந்திய கிரிக்கெட் அணியிலிருந்து வினோத் காம்ப்ளியை நீக்கியது சரியா...?*

! அவர் மது அருந்திவிட்டு, இரவு நேரம் கழித்து வந்து, பிற ஆட்டக்காரர்களுக்குத் தொந்தரவு தருவதை வழக்கமாகக் கொண்டிருந்தாராமே...! அந்த காரணத்தைப் பார்க்க, நடவடிக்கை சரிதான்!



• சரியான நடவடிக்கை!

● **என். சண்முகம், திருவண்ணாமலை.** ❑

*? எம்.ஜி.ஆரை 'மலையாளி' என்ற கலைஞர் ரஜினிகாந்தை 'மராட்டியன்' என்று சொல்ல மாட்டாரா...?*

! ரஜினி ஆதரவு நீடிக்கும் வரை சொல்ல மாட்டார்!

● **வி. பரமசிவம், மதுரை.**

*? பெண் என்றால் பேயும் இரங்கும் என்பது சரியாகிவிட்டதே... சென்ற வார கேள்விக்கான பரிசு இரு பெண்களுக்கு (தலா ரூ. 25) வழங்கப்பட்டுள்ளது சரிதானா...?*

! 'பெண் என்பதால் என்னை எதிர்க்கிறார்கள்'- என்று 'ஜெ' சொன்னாரே... அப்போது நான் என்னவாக இருந்தேன்...!

● **சி. பூங்கோதை, சென்னை - 78.**

*? பக்ரீத், மே தினம், தேர்தல் நாள், புத்த பூர்ணிமா என்று கடந்த வாரம் தொடர்ந்து விடுமுறை... ரொம்ப ஜாலிதானே...?*

! பத்திரிகையாளர்களுக்கு விடுமுறை என்பதெல்லாம் கிடையாதுங்க.... அதனால நான் விடுமுறைக்கு எதிரின்னு நினைக்காதீங்க... தொடர் விடுமுறைகள் தேச பொருளாதாரத்தில் தொடர் சறுக்கல் என்பதை மட்டும் ஞாபகப்படுத்தக் கடமைப்பட்டிருக்கேனுங்க....

• நன்றி....



• • ......உணர்ச்சி



• விளக்கம் என்ன...?



---

❑ **ரூ. 25 பரிசு பெறுபவர் :**
**என். சண்முகம்,**
**32- கே, பைபாஸ் சாலை,**
**திருவண்ணாமலை -**
**606 602.**

---

'சடாசட்' உடனடி ரேஸரை எடுத்த கப்பு, நுரை பொங்கி வழியும் முகத்தருகே கொண்டு செல்லும் போது – அலறல்!

"இது கடவுளுக்கே அடுக்குமா?"

திடுக் – விதிர் – அதிர்ந்து திரும்பினான் கப். அலறியது, ஆளும் திருமதி குஞ்சிதபாதம் சந்திரசேகர். இவனது சொந்த அப்பாவின் ஒரே மனைவி!

"அம்ஸ்! நான் ஷேவ் செய்வது கடவுளுக்கே அடுக்குமாங்கிறியா?"

"ஹோ! அதைப் பற்றி எனக்கென்ன? இந்த லெட்டர்தான் என்னைக் கவலைக்கிடமாக்கிக் கொண்டிருக்கு."

நீண்ட பழுப்பு நிற கவரைப் பிடுங்கினான். விடுநரில் 'மூன் டீ.வி.' முத்திரை!

"ஹை! மூன் டீ.வி. சானல்! ஏதாவது நிகழ்ச்சி அறிவிப்பாளர் பதவிக்கு மனு போட்டு, உன்னை செலெக்டும் செய்து தொலைச்சுட்டாங்களா? 'வயதான' இளம் அழகிகளை அறிவிப்பாளரா போடும் அளவுக்கா பஞ்சம்?"

# எதிரும் புதிரும்

"மூளையில்லாமல் பேத்தாதே. பிரிச்சுப் படி."

பிரித்துப் படித்தான்.

மதிப்பிற்குரிய திருமதி குஞ்சிதபாதம் சந்திரசேகர் அவர்களுக்கு,

இங்கு அனைவரும், உங்கள் தயவிலும், விளம்பரதாரர்கள் தயவிலும், சேமம். அங்கு எல்லோரும் நலம்தானே? (நல்லபடியா இருக்கிறதாலேதான் இது மாதிரி முட்டாள்தனமா சொல்றாங்க – கப்பு).

எங்களது 'எதிரும் புதிரும்' நிகழ்ச்சியில் கலந்து கொள்ளும்படி தெரியாத்தனமாய் அறிவித்தபோது லட்சக்கணக்கில் கடிதம் வரும், பரிசிலனை செய்தே காலத்தைத் தள்ளி, நல்ல (ஏமாந்த) ஸ்பான்சர் கிடைத்த பிறகு தொடரலாம் என்று திட்டமிட்டிருந்தோம். அறிவிக்கப்பட்டு – மூன்று தடவை கடைசி தேதியைத் தள்ளி வைத்தும் 24 ஜோடிகள்தான் லெட்டர் போட்டிருந்தாங்க. இவங்களை 'ஷூட்' பண்ணினாலே வாரம் நாலு ஜோடின்னு ஆறு வாரம் தாங்கும்.

அதனாலே வர வைகாசி பத்தாம் தேதி, மிதுன லக்னத்தில் திருவாதிரை நட்சத்திரத்தில் ஜெ. ஜெ. பிலிம் சிட்டியில் நிகழ்ச்சியை 'சுட' இருக்கிறோம். நீங்கள் அங்கு, 10:30க்குள் உங்கள் செலவில், மறுபடியும் அழுத்தமாக, உங்கள் செலவில் வந்து சேரும்படி கேட்டுக் கொள்கிறோம்.

பி.கு. : இக் கடிதத்தின் இப் பகுதியை வழங்கியது அரோகரா ஃபைனான்ஸ். (எதையும் விடமாட்டாங்க. இதுக்கு கூட ஸ்பான்ஸர்!)

"நல்ல நியூஸ்தானேம்மா. எதுக்கு நீ கடவுளை சாதாரண கெட்ட வார்த்தையாலே திட்றே?"

"அடேய்! 'எதிரும் புதிரும்'ங்கறது ஜோடிப் பொருத்தம் மாதிரிடா."

"ஜோடிப் பொருத்தம்? இருக்கட்டுமே. அப்பாவைக் கூட்டிட்டு ஜோரா கலந்துக் கோயேன். அவரும் தன் மூஞ்சியை டீவியில் காட்டணும்னு ஆசைப்படறாரு. இதுக்காகவே 'காணாமல்' போலாமான்னு நெனைக்கிறாரு."

"உங்கப்பா முகத்தை டீவியிலே காட்டி, அதை குழந்தைகள் பார்த்து ராவுலே அலறணுமா? இது தம்பதிகளுக்கான ஜோடி பொருத்தமில்லைடா. இது ஒன்லி ஃபார் மருமகள் – மாமியார்."

"இந்த மாதிரி, ஒத்து வராத ஆட்டத்துக்கெல்லாம் உன்னை யார் எழுதிப் போடச் சொன்னது?"

"சமுவுக்கு முன்னே எழுதினேன். சபிவுக்கு பின்னே அழைச்சிருக்காங்க."

"ஐயோ தாயே! வெஜிடபின் நாடுல்ஸ் மாதிரி குழப்பறியே!"

"மண்டு, மண்டு! சண்டைக்கு முன் சண்டைக்கு பின்."

"அடடா! நம்ம வாஸ்த்யாயினியோடு நீ சண்டை போடறதுக்கு முன்னே எழுதி போரெல்லாம் ஓய்ந்த பிறகு வந்திருக்கிறியா?"

"நம்ம வாஸ்த்யாயினி இல்லைடா. உன் வாஸ்த்யாயினி."

"அப்படியே இருக்கட்டும். இதெல்லாம் ஆகுற காரியமா? உன் பேரைக் கேட்டாலே டென்ஷனாயிடறா. ஃபுல் டென்ஷன்."

"அந்த ஆந்தைக்கு மட்டும்தான் டென்ஷனா! எனக்கும்தான் டென்ஷன். டபுள் ஃபுல் டென்ஷன். ஆனால், இதனாலே நமக்கு சுலபமா வரக்கூடிய சில ஆயிரத்தை நாம இழக்கிறோம்."

**அஷோக் பார்கவி**

சில ஆயிரம் ரூபாய் வருமானம் என்றதும் வாயில் ஜலம் ஊற, "எப்படி மம்?" என்றான் கலப்படமில்லா தேன் ஒழுக.

"இந்த எதிரும் புதிரும் நிகழ்ச்சியில் கலந்துக்கிட்டாலே நாலாயிரம் ரூபா மதிப்புள்ள பட்டுப் புடைவை இனாம்."

"இனாம் வாங்கும்போதே ஒண்டிக்கி ஒண்டி நிப்பாங்களே?"

"இடியட். ஒரு புடைவைன்னு நெனைச்சியா, ஆளுக்கொரு புடைவை! அதோடு அரோகரா பினான்டேஷன்ஸ் வழங்கும் தேக்கு மர யூனிட்கள் இலவசம்."

நாலாயிரம் மதிப்புள்ள பட்டு இலவசமாக! போல கூப்பிட்டான்.

"யெஸ், மை சன்."

"நீயும் வாஸ்த்யாயினியும் சமாதானமா..." அம்மாவின் முகம் நவகிரகக் கோணலாய் மாறுவதைக் கண்டு நிறுத்தினான்.

"சே... சே... சமாதானம்னா அது நிரந்தரம் இடையாது. தாற்காலிக சமாதானம். ஒரு தேர்தல் கூட்டு மாதிரி."

அம்மா தீவிரமாக யோசித்தாள்.

"உனக்கும் பட்டுப் புடைவை கிடைச்ச மாதிரி..."

"இதுக்கு அவ சம்மதிப்பாளா?"

"அது என் பொறுப்பு. ஒரு பட்டு,



கல்யாணமான தினதந்து விருந்து வாஸ்த்யாயினி கேட்டு வரும் கோரிக்கை. 'ஆசையாய், உங்க சம்பளத்தில், குறைந்த விலையில், ஐயாயிரம் மதிப்பில் பட்டு வாங்கித் தந்ததுண்டா?'

இவனும், அந்த கோரிக்கையை காவிரி நதிநீர் மாதிரி தள்ளிப் போட்டுக் கொண்டே வந்திருந்தான். இன்றைய வாழ்க்கைப் போராட்டத்தில் இதுவே பெரிய இஷ்யூவாகி விட்டது.

அதிலிருந்து தப்பிக்க நல்ல சந்தர்ப்பம். 'நிகழ்ச்சியில் ஜெயிக்கக் கூட வேண்டாம். கலந்து கொண்டாலே அத்தனையும் இலவசம்.'

"அம்மா" என்று ஜெகதாஸ் குரலில் மன்னன் படத்தில் அருணொழுகக் கூப்பிடுவது

இலவசமா கிடைக்குதுன்னா, அன்னை தெரசா மாதிரி சேவை செய்யக் கூட தயங்க மாட்டா."

"அப்ப நான் தயார். ஆனா ஒரு கண்டிஷன் உண்டு."

"ஐயோ! என்ன அது?"

"நிகழ்ச்சியிலே, அதை இதை சாக்கா வைத்து மறைமுகமா கோட் வோர்ட்சிலே என்னை விமர்சிக்கக் கூடாது."

"ப்பூ! இவ்வளவுதானா? நான் அவளைப் பார்த்துப் பேசிட்டு வர்றேன்."

'தம்ஸ் அப்' காட்டினாள் அம்மா.

சரியாய் அரை மணி நேரத்துக்குள்,



"முதல்வர் பதவிப்பிரமாணம் எடுக்கும்போது இப்போ புதுசா உறுதிமொழி ஏதோ சேர்த்திருக் காங்களாமே!"

"ஆமா, உடன்பிறவா சகோதரி அந்தஸ்தை எவருக்கும் கொடுக்கமாட்டேன்" என்பதுதான்.

— நாஞ்சில் சு. நாகராஜன்



''உனக்குத்தான் லாட்டரியில பத்து லட்சம் விழுந்துடுச்சே. அப்புறம் ஏன் கவலையா இருக்கே?''

''அநாவசியமா ரெண்டு டிக்கெட் வாங்கிட்டேனே!''

— கே. விக்ரம்.

''சே! மொடக்குறிச்சி காரணமா நம்ம புரட்சித் தலைவி தோத்துட்டாங்க!''

''அங்கதான் தேர்தலே நடக்கலியே?''

''அதானே பிரச்னை. 234 தொகுதிகள்லயும் தேர்தல் நடந்திருந்தா கூட்டுத் தொகை 9 வருதுல்ல; நிச்சயம் ஜெயிச்சிருப்பாங்க!''

— பி.ஜி.பி. இசக்கி



வாஸ்த்யாயினி 'சாப்பிட்டு ரெஸ்ட் எடுப்பதற் காகவே வேலை பார்க்கும் ஆபீசுக்குள் வந் தான்.

"வீட்டுலேதான் உங்க தொல்லை தாங் கலைன்னு இங்கு வந்தா, இங்கேயும் புகுந் துட்டீங்களா? நிம்மதியா கதையைப் படிக்க விடாமல்."

அவளைத் தடுத்து நிறுத்தி, காண்டீனுக்குக் கூட்டிப்போய் ஒரே மூச்சில் விஷயத்தைச் சொல்லி, அவர்கள் அறிவித்திருந்த கவர்ச்சிகர திட்டங்களையும் அவிழ்த்து விட்டான்.

"நீயும் அம்மாவும் தாற்காலிகமா கூட்டணி அமைச்சு, ஜெயிச்சா, முதல் பரிசா குடும்பத் தோடு உகாண்டா போய் வரலாமாம்."

பாயிண்ட்டுக்கு வருகிற மாதிரி அர்த்த புஷ்டியோடு இவனை நோக்கினாள்.

"என் அம்மாவிடம் பேசி, சம்மதம் வாங் கறது என் பொறுப்பு. எனக்கு உன் சம்மதம் தான் அதிமுக்கியம்."

கண்களை மூடினாள். யோசித்தபடி தட்டை காலி செய்து கொண்டிருந்தாள். "இது நிஜமா இருக்குமான்னு சந்தேகமா?" மௌன மாக, கண்களை இறுக மூடிக் கொண்டு, தீவிர மாக யோசிக்க, "நரசிம்மராவ் கூட, கூட்டணி அமைக்க இவ்வளவு யோசிக்கலை."

"சம்மதம். ஆனா.."

அப்பாடா! மீன் மாட்டியது!

"அதை இதை சாக்கா வைத்து மறைமுகமா சங்கேத பாஷையிலே எங்கம்மா உன்னை விமர்சிக்கக் கூடாது. அதானே சொல்ல வந்தே?"

"அதெப்படி, நான் நெனைச்சதை, நீங்க சொன்னீங்க?"

"ஒரு பெண்ணின் மனசு, இன்னொரு பெண்ணுக்குத்தான் தெரியும்" என்று சொல்லி விட்டு வேகமாக, அவள் மனம் மாறுவதற்குள் இடத்தை காலி செய்தான்.

மீண்டும் வீடு திரும்பினதும் முதல் காரிய மாக, அம்மாவை, மூன் டீ.வி.க்கு சம்மதம் தெரிவித்து , பதில் எழுத வைத்தான். போட் டிக்குப் போவதற்கு முன் இருவரது முழு பயோ டேட்டாவையும் தயாரித்து பரீட்சைக்கு படிக்க வைப்பது போல படிக்க வைத்தான். நிகழ்ச் சிக்கு முன் தினம் ஒத்திகையும் பார்க்க விரும் பினான்.

இருவரையும் தனித்தனியே உட்கார வைத்து இவனே கேள்வி கேட்கப் போவதாக தயக்கமாகச் சொன்னான். பிரளயம் வெடிப் பதற்குப் பதிலாக இருவரும் சம்மதித்ததை நினைத்தபோது, நிஜமாகவே சமாதானமாகப் போய் விட்டார்களோ என்று நினைத்தான்.

முதலில் அம்மா.




# மன நிம்மதியான முதலீடு - பரிபூரண பாதுகாப்பு™

உங்கள் டெபாசிட்டுகள் T.நகரில் உள்ள பிரதான அசையா சொத்தால்
(டோர் நம்பர். 27 சி. பிளாக் 5488/1, ராமேஸ்வரம் ரோடு) பாதுகாக்கப்படுகிறது.

| | | |
|---|---|---|
| படித்த அனுபவம் மிக்க நிபுணர்களின் சீரியநிர்வாகம் | கௌரவமான வருமானம் | மரியாதையான சேவை |

| பென்ஷனர் / பொதுஜன பாதுகாப்புத் திட்டம்™ | | | |
|---|---|---|---|
| 1 வருடம் | : | 24 % | + 4 % இன்சென்டிவ் P.A. |
| 2 வருடம் | : | 24 % | + 6 % இன்சென்டிவ் P.A. |
| 3 வருடம் | : | 30 % | + 2 % இன்சென்டிவ் P.A. |
| 5 வருடம் | : | 36 % P.A. | |

| வாடிக்கையாளர் வசதித் திட்டம்™ | | |
|---|---|---|
| எப்போது வேண்டுமானாலும் | 30 தினம் | 18 % |
| பணம் எடுத்துக் கொள்ளலாம் | 45 தினம் | 19 % |
| புதுப்பிப்பதற்காக வரவேண்டிய | 60 தினம் | 20 % |
| அவசியம் இல்லை. | 90 தினம் | 21 % |

முன்கூட்டிய வருவாய்த் திட்டம்™ முழு வட்டியும் டெபாசிட் செய்யும் தேதியன்றே தரப்படும். 1 வருடம் : 20 %
3 வருடம் : 55 %

**சுமங்கலி கல்யாணத் திட்டம்™ மேக்சிமம் இன்கம் ஸ்கீம்™**

| டெபாசிட் | காலம் | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| ரூ. 5,000 | 3 வருடம் | ரூ. 12,000 |
| ரூ.10,000 | 3 வருடம் | ரூ. 24,000 |
| ரூ.20,000 | 3 வருடம் | ரூ. 48,000 |

**குழந்தைகள் எதிர்காலப் பாதுகாப்புத் திட்டம்™**

| டெபாசிட் | காலம் | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 15 வருடம் | ரூ. 37,000 |
| ரூ. 5,000 | 15 வருடம் | ரூ. 1,85,000 |
| ரூ.10,000 | 15 வருடம் | ரூ. 3,70,000 |

**பெஸ்ட் பாண்ட் ஸ்கீம்™**

| டெபாசிட் | காலம் | முதிர்வுத்தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 10 வருடம் | ரூ. 12,000 |
| ரூ. 5,000 | 10 வருடம் | ரூ. 60,000 |
| ரூ. 10,000 | 10 வருடம் | ரூ. 1,20,000 |

**தாத்தாவின் பரிசுத் திட்டம்™**

| டெபாசிட் | காலம் | முதிர்வுத்தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 15 வருடம் | ரூ. 37,000 |
| ரூ. 5,000 | 15 வருடம் | ரூ. 1,85,000 |
| ரூ. 10,000 | 15 வருடம் | ரூ. 3,70,000 |

## பெஸ்ட் பெனிபிட் அண்டு கேரண்டி பண்ட் டிரஸ்ட் (Regd) (நிறுவியது : 1979)

தலைமை கார்யாலயம் : 3 வது மாடி, சாந்தி காம்ப்ளெக்ஸ், 26, ரங்கநாதன் தெரு, மாம்பலம் ரயிலடி சமீபம், T. நகர், சென்னை – 17.

கிளை : 7, ஸ்டேஷன் ரோடு, முதல் மாடி, ஸ்டேஷன் ரோடு, தாம்பரம் சானடோரியம், சென்னை – 47.

கிளை : 5, 2வது மெயின் ரோடு, நியூ காலனி, குரோம்பேட்டை, சென்னை – 44.

கிளை : 13, காலேஜ் ரோடு, நங்கநல்லூர், சென்னை – 114.

சொத்து பாதுகாப்பு,
மாத வட்டிக்கும், அசலுக்கும்
முன்கூட்டியே செக்.

உங்கள் வீட்டிற்கும் வந்து சேவை செய்கிறோம். போன் : 4348560, 4347025

BBGFT - பாதுகாப்பின் சின்னம்

**Prof. V. விவேகானந்த்**
B.Com., (Distn), DOA (Distn), M.B.A. (Distn), CAIIB
(All India First), EKSAMD (West Germany)
(Distn), IAS (Topper)
Managing Director

**Dr. பரமேஸ்வரி, M.B.B.S.**
**Chairman**

எல்லா கார்யாலயங்களும்
ஞாயிறும் திறந்திருக்கும்

# கணக்கு!

ராவ் போடுவது ஹவாலா கணக்கு
ஜெ போடுவது பதவிக் கணக்கு
சசி போடுவது சொத்துக் கணக்கு
திருநாவு போடுவது ஜால்ரா கணக்கு
குமரியார் போடுவது பல்டி கணக்கு
மக்கள் போடுவது அறிவுக் கணக்கு
மூப்பனார் போடுவது மானக் கணக்கு
கலைஞர் போடுவது ஞானக் கணக்கு
ஆண்டவன் போடுவது நியாயக் கணக்கு

– கரூர் செங்குந்தபுரம் 5வது கிராசில் ரஜினி ரசிகர்கள் எழுதி வைத்திருந்தது இது. ரஜினி சொன்ன மாதிரி, மக்கள் ரூபத்தி லிருக்கிற ஆண்டவன் இந்தத் தேர்தலில் நியாயக் கணக்கையே போட்டுவிட்டான்!

– பிரசன்ன குமார்



"உன் மருமகள் கிணற்றில் விழுந்துட்டா நீ என்ன செய்வே?"

"அந்த 'நல்ல காரியம்' மட்டும் நடந்து துன்னா, அவள் மூன்று முறை தண்ணிருக்கு மேலே வந்து வந்து போகும் வரை காத்திருப் பேன். பிறகு, மெல்லிய குரலில், 'ஐயோ! எல் லோரும் நிதானமா வாங்களேன்'னு கத்து வேன்."

"ஆஹா! என்னே மாமியார் பாசம்! என் கையிலிருக்கும் முடியெல்லாம் சிலிர்க்குது."

அடுத்த சான்ஸ் வாஸ்த்யாயினிக்கு.

"உங்க மாமியார் வெட்கிரைண்டரில் மாவை ஆட்டி விட்டுக் கழுவும் போது, குழவிக்கடியில் விரல்கள் சிக்கிக் கொண்டால் என்ன செய்வீர்கள்?"

வாஸ்த்யாயினி கனைத்துக் கொண்டாள். 'நான் கொண்டு வரும் குழவியெல்லாம் மாமியாரின் விரல்களை நசுக்குவதற்காகவே தயாரிக்கப்பட்டவை. அது தன் வேலையைச் செவ்வனே செய்யும் என்பதில் சந்தேகமே யில்லை. ஒருவேளை அப்படி அதிலிருந்து சாமர்த்தியமாகத் தப்பி விட்டால், வெட் கிரைண்டருக்கடியில் துடைக்க வைத்து, பெல்டில் கையை வகையாய் மாட்ட வைத்து..."

"அது படக்கென்று உடையும் சப்தம் கேட்ட பிறகு, நிதானமாக மெயினை ஆஃப் செய்வீர்கள். இல்லையா?"

"ஆமாங்க. சரியா சொன்னீங்க."

"இப்படி பதில் சொன்னால் உகாண்டா போக மாட்டே. அந்தமானுக்குத்தான் போவே, தெரியா."

ஆனால் நிகழ்ச்சியில் இருவருமே மிக அன்னியோன்யமாக நடந்து, முதல் பரிசைப் பெற்ற போது சுப்பிரமணி டெபாசிட் கிடைத்த வேட்பாளர் மாதிரி மகிழ்ச்சிக் குளத்தில் நீந்திக் கொண்டிருந்தான்.

கிளம்பும் போது அறிவிப்பாளர் சொன் னார். "உங்களது பரிசு, இன்னும் ஒரு வாரத்தில் வீடு தேடி வரும்."

வாரம், மாதமானது. பரிசு மட்டும் வர வில்லை. அடங்கியிருந்த இருவரும் முணு முணுக்க, ஒரு பார்சல் வந்தது. கூரியர் சர்வீசில், வாஸ்த்யாயினி வீட்டில் இருக்கும் போது.

அழகான பெட்டியில் வெல்வெட் துணி போட்டு மூடியிருந்தார்கள். 'செக்காகத்தான் இருக்கும்', பிரித்தான். கம்ப்யூட்டரில் டைப் செய்யப்பட்ட கடிதம்.

அன்புடையீர்,

எதிரும் புதிரும் நிகழ்ச்சியில் நீங்கள் முதல் பரிசு பெற்றதை நாங்கள் அறிந்தோம். அதை தருவதற்கு ஏற்பாடுகள் செய்யும் போதுதான் ஓர் உண்மையைக் கண்டோம்.

கலந்து கொண்ட அத்தனை ஜோடியும் நிகழ்ச்சிக்காக ஒற்றுமையாய் இருப்பது போல நடித்தார்கள். ஆனால் நாங்கள் உங்களை நம்புகிறோம். உங்கள் வீட்டுக்கு, வரும் ஆறு மாதத்திற்குள் எங்களது மூன் டீவி. ஆட்கள் திடீர் திடீரென்று வருவார்கள். அப்போதும் நீங்கள் ஒற்றுமையாக இருந்தால், வேறுவழியில்லாமல் உங்களை உகாண்டாவுக்கு முதல் பரிசாக நாடு கடத்துவோம் என்பதைத் தெரிவி...

அம்மாவும், வாஸ்த்யாயினியும் 'போட்ட போடில்' சுப்பிரமணி ஒரு மாதம் மெடிக்கல் லீவில் இருந்தது வேறு கதை!

# போலந்தைப் பார்த்துப் பெருமூச்சுத்தான்!

♦ "வேண்டாம் குதிரை வியாபாரம்'' தலையங்கம் படித்தேன். 'கற்றோருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு; ஊழல் புரிந்தோருக்கு ஊர்தோறும் எதிர்ப்பு!' இந்த மாதிரி புதுமொழியெல்லாம் கல்கிக்கே கைவந்த கலை. 'ஊழல் புரிந்தோருக்கு வோட்டுப் போடாதீர்கள்' என்று ஓங்கிச் சத்தம் போட்டீர்கள். அதனை நாங்கள் புரிந்து கொண்டோம். ஊழல் புரிந்தவர்களுக்கு வோட்டுப் போடவில்லை.

திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

## ரூ 20 பரிசு பெறும் கடிதம்

♦ 'டீன் ஏஜில் ஆணும் பெண்ணும் நட்புடன் பழகுவது சாத்தியமா? சரிதானா?' என்றால் விடை இதுதான் : பழக்கத்தை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று தற்செயலாகப் பழகுவது. இன்னொன்று திட்டமிட்டுப் பழகுவது. பாடத்தில் அல்லது பணியில் ஒரு சந்தேகம். அதற்கு விளக்கம் தர அவனால்தான் முடியும் என்ற எண்ணத்துடன் அணுகினால் அது தற்செயல். அதில் தவறு இல்லை. ஆனால் அவனை அணுக வேண்டும் என்பதற்காகவே ஒரு பெண்ணுக்குச் சந்தேகங்கள் உற்பத்தியாகுமானால் அவள் திட்டமிட்டுக் கெட நினைக்கிறாள் என்று அர்த்தம். கோயிலில் தெரிந்த பையனைப் பார்த்தால் 'ஹலோ... ஹவ்வார் யூ...' ஒரு புன்னகை... அவ்வளவுதான்.

அது தற்செயல். பார்ப்பவர்கள் விகற்பம் நினைக்க வழியே இல்லை. ஆனால் 'தெரிந்த பையன். கோயிலுக்கு வந்தான். அவனோடு பேசிட்டு இருந்தேன்' என்றால் அவன் சின்னவனோ.. பெரியவனோ.. 'ஆண்' என்னும் ஈர்ப்பு அதில் இருக்கிறது. எனவே, 'பாய் ஃபிரெண்டுடன் பழகும் நோக்கம்' என்ன என்பதை ஒவ்வொரு பெண்ணும் தன்னைத் தானே ஆராய வேண்டும். அப்போதுதான் அது தேவையா வேண்டாமா என்ற கேள்விக்கு விடை கிடைக்கும்.

திருச்சி - 14, தமிழினியன்.

♦ நண்பனுடன் எப்படிப் பழகுகிறோமோ அதே போல் தோழியுடனும் பழகினால்தான் அது உண்மையான நட்பு. நண்பனுக்கும் தோழிக்கும் வித்தியாசம் பார்த்துப் பழகினால்தான் பிரச்னையே. உண்மையான நட்பு என்பது ஆண், பெண் வித்தியாசம் பார்க்காது.

சென்னை – 7,

ஆர். ஏ. ரவிசங்கர்.

♦ அரசியல் தலைவர்களுக்கு அடிமாடாய் உழைப்பவர்களின் தேர்தல் கால உழைப்பைத் தெளிவாகக் காட்டியது கவிஞர் நா. வே. அருளின் கவிதை.

சென்னை – 14,

அய்யாறு வாசுதேவன்.

♦ கடுமையான சட்ட திட்டங்களாலும், காலில் விழாத கலாசாரத்தாலுமே போலந்து போன்ற நாடுகளில் ஊழல் அதிபர் எலக்ட்ரீஷியன் ஆக "பதவி உயர்வு" பெறுகிறார். நம் நாட்டில் ஜனநாயகம் என்ற பெயரில் சட்டத்தில் ஏராளமான ஓட்டை இருப்பதாலும் அப்பாவி ஜனங்களாலும் அரசியல்வாதிகள் பதவிக் காலத்தில் முடிந்த வரை சம்பாதித்து (சுருட்டி) விடுகிறார்கள். பதவி போன பிறகும் தைரியமாய் வளைய வருகிறார்கள். போலந்து நாட்டைப் பார்த்து "ஹூம்" என பெருமூச்சு விட வேண்டியதுதான் நாம்!

கவுண்டம்பாளையம்,

பலராம் செந்தில்நாதன்.

♦ 'தோல்வியும் ஓர் அனுபவமே...' என்று தேர்தல் தோல்வியை ஸ்போர்ட்டிவ்வாக எடுத்துக் கொள்ளும் மனப் பக்குவத்தை வெளிப்படுத்திய ரேவதி ஒரு புதுமைப் பெண் (மணி) தான். அவரது மினி பேட்டி இனிமை!

அயன்புரம்,

த. சத்தியநாராயணன்.

♦ கழுதைகள் போல புத்தக மூட்டையைச் சுமக்கும் மாணவர்களுக்குப் "புத்தகம் இல்லாத வகுப்பறைகள்'' ஒரு வரப்பிரசாதம். இந்தத் திட்டத்தைத் தமிழகத்தில் உள்ள எல்லாப் பள்ளிகளிலும் செயல்படுத்தினால் மாணவர்கள் மகிழ்ச்சி அடைவார்கள்.

காப்பரத்தாம்பட்டி,

கே. ராஜாதிருவேங்கடம்.

♦ 'சீசனுக்கு ஏற்ற ஸ்டில்ஸ்' சரியான தேர்வு!

கோயமுத்தூர்,

கோ. கல்யாணசுந்தரம்.

♦ பாகவதம் பற்றி சுஜாதா தந்த செய்தி வியப்பூட்டுகிறது!

மதுரை – 9,

இரா. கல்யாணசுந்தரம்.

♦ யோகி எழுதிய 'மனுஷ மனசு' கதை படித்தேன். 'பணமே மனிதனை அளக்கும் கருவி' என்ற கதைக் கரு பழையதானாலும் கதை சொல்லப் பட்ட விதம் சுருக் நறுக்!

ஸ்ரீரங்கம்,

மாலினி சௌரிராஜன்.

♦ 'வெறும் ஜெ.தான். ஜேஜே யில்லை' – அருமையான வரிகள்.

திருத்தங்கல், இ. சிதம்பரம்.

♦ செம்பியனின் 'வீடியோவில் வீரப்பன்' சூப்பர் சவடியார்!

திருநெல்வேலி – 11,

எஸ். ஆர். ஸ்வாமி.

## வட்டமேஜை

# ‘ஆன்லைனில்’ டெபாசிட் செய்ய சென்றதுண்டா?

## கட்டாயம் செல்ல வேண்டும்.



ஏனெனில், உங்கள் சௌகரியத்திற்கு ஏற்ற வண்ணம் டெபாசிட் முறைகள், காலந்தவறாவட்டி, ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட சேவை. கைதேர்ந்த நேர்த்தியான தொழில்முறை .... இப்படி எத்தனையோ இருந்தும் இதில் மிக முக்கியமாக கவனிக்கப்பட வேண்டியது ஆன்லைனின் **“கேர்-‘ஏ’ (FD)”** ரேட்டிங் - உங்கள் டெபாசிட்டுக்கு அதிக பாதுகாப்பு.




இவையனைத்தும் RBI-ன் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டது. அடடா!

கவலை பறந்தோடி விட்டது பார்த்தீர்களா?



**அதனால்தான் அமெரிக்கா, சிங்கப்பூர் மற்றும் அரபு நாடுகளிலுள்ள பெரும்பாலான NRIs ‘ஆன்லைனில்’ நம்பி டெபாசிட் செய்திருக்கிறார்கள்.**

தொலைபேசியைக் கையில் எடுங்கள் அல்லது ஃபேக்ஸ் செய்யுங்கள். மற்ற விவரங்கள் அனைத்தும் உங்கள் வீட்டின் வாயிற்படியில்!



தனிப்பட்ட இந்த சேவை ஒன்றே போதும், ஆன்லைனை நீங்கள் மற்றவர்களிடம் சிபாரிசு செய்திட! இப்பொழுதே ஆன்லைனுடன் தொடர்பு கொள்ளுங்கள்.

**CARE 'A' RATING**



**ஆன்லைன் ஃபைனான்சியல் சர்வீசஸ் லிமிடெட்**

248, இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.

தொ.பே.: 8276768 / 8265301 / 8234072. ஃபேக்ஸ்: 8267008

இந்த விளம்பரம் இந்து நாளிதழில் 29.1.96 அன்று வெளிவந்த சட்ட பூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சியே. இந்த விளம்பர வாசகம் டெபாசிட் விண்ணப்பப்படிவத்திலும் அச்சிடப்பட்டுள்ளது. டெபாசிட் செய்வதற்கு முன் இதை கவனத்தில் கொள்வீர்.



# பிழைப்புக் கொடுக்கும் பூச்சி!

பிழைப்பைக் கெடுக்கிற கம்ப்யூட்டர் வைரஸ் தெரியும். பிழைப்பைக் கொடுக்கும் கம்ப்யூட்டர் பூச்சி பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டாமா?

ஆயிரம் ஆண்டுப் பூச்சி என்ற மில்லென் னியப் பூச்சி (Millenium Bug)தான் அது!

இன்றைக்குக் கம்ப்யூட்டர் ஆணைத் தொடர்கள் பெரும்பாலும் சி, சி பிளஸ் பிளஸ் போன்ற கம்ப்யூட்டர் மொழிகளையோ, நாலாந்தலைமுறை மொழிகளையோ (Fourth Generation Language) பயன்படுத்தி எழுதப் படுகின்றன.

ஒரு பத்து ஆண்டுகளுக்கு முன்னால் கோபல் (Cobal) மொழிதான் சகலவிதமான கம்ப் யூட்டர்களிலும் ஆணைத் தொடர் எழுத உப யோகப்படுத்தப்பட்டது.

அப்படி எழுதப்பட்ட கோடிக்கணக்கான கோபல் ஆணைத்தொடர்கள் இன்னும் உலகம் முழுவதும் புழக்கத்தில் உள்ளன.

இந்த ஆணைத் தொடர்களில்தான் மறைந் திருக்கிறது ஆயிரம் ஆண்டுப் பூச்சி. என்ன அது?

சாதாரணமாக நாம் தேதியை எப்படி எழுதுகிறோம்? 3.12.95 என்பது போல. ஆயி ரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஐந்தாம் ஆண்டு டிசம்பர் மாதம் மூன்றாம் நாள் என்று பொருள்படும் இந்தக் குறியீட்டு முறையில், கடைசியில் வருகிற 95, 1995ஐக் குறிக்கிறது.

கோபல் மொழி ஆணைத் தொடர் கிட்டத் தட்ட சாதாரண ஆங்கிலக் கட்டுரை போல, எளிய சொற்களால் ஆனது. நிறைய வளவள... பெரும்பாலான கோபல் புரோகிராம்களில், தேதியையும் மேலே சொன்ன உலக வழக்குப் படி பதிந்து வைக்கிற ஏற்பாடு. பிரச்னையே அங்கேதான்.

வருஷத்தை 84 என்று குறிப்பிட்டால் 1984 என்றோ, 97 என்று குறிப்பிட்டால் 1997 என்றோ இனம்கண்டு, இரண்டு தேதிகளுக்கு இடையே நாள் இடைவெளி, மாச இடை வெளி விவரம் பார்த்து வட்டி இன்னபிற விஷயங்களை நொடியில் கணக்குப் பண்ணித் தருகிற கம்ப்யூட்டர்கள் 1999ம் ஆண்டு டிசம் பர் 31-ந் தேதி முடிய ஒரு கஷ்டமும் இல்லா மல் இயங்கும்.

ஆண்டு 2000 பிறந்து எல்லோரும் புத் தாண்டு வாழ்த்துக்களையும் காலண்டர்களை யும் பரிமாறிக் கொண்டு இருக்கும்போது, இந்தக் கம்ப்யூட்டர்கள் வேலை ஓடாமல் நின்று போகவோ, தப்பும் தவறுமாகக் கணக் குப் போடவோ செய்யும்.

1.1.00 என்று எழுதினால் நாம் வருஷம் 2000, ஜனவரி ஒன்னாந்தேதி என்று தெரிந்து கொள் வோம். கம்ப்யூட்டர் அது 1900ம் ஆண்டா அல்லது பூஜ்யம் என்ற ஆண்டா என்று புரியா மல் மருள... என்னவெல்லாம் நடக்கப் போகி றதோ கோபல் புரோகிராம்களில்... இப்படி 'இரண்டு இலக்க வருஷக் குறிப்பு' என்று புகுந்த ஆயிரம் ஆண்டு பூச்சி கைங்கர்யத்தில்...

கம்ப்யூட்டர்களையே முழுக்க முழுக்க நம்பியிருக்கும் பல நிறுவனங்கள் இப்போது முதலே பரபரப்பாகச் செயல்பட்டுப் பூச்சி பிடிக்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

எல்லா கோபல் ஆணைத்தொடர்களையும் வரிவரியாக அலசி, எங்கெங்கே வருடம் இப் படி இரண்டு இலக்காக உள்ளதோ, அதை எல்லாம் நான்கு இலக்காக மாற்றுகிற வேலை யைச் செய்துதர என்று ஒரு புதுத் தொழில் சூடுபிடித்துக் கொண்டு வருகிறது.

ஒவ்வொரு நிறுவனத்திலும் இப்படி வண்டி வண்டியாகப் பூச்சி பிடிக்க வேண்டிய வரிகள் உள்ளதால், இந்த ஆணைத் தொடர்களை இந்தியா போன்ற நாடுகளுக்கு அனுப்பி, சரியமைத்து வாங்க முயற்சி செய்கிறார்கள்.

ஒரு வரிக்குப் பதினைந்து, இருபது ரூபாய் கிடைக்கும் என்பதால், வரும் இரண்டு மூன்று ஆண்டுகளில் இந்த வேலையைச் செய்து இங்கேயும் நிறையப் பேர் பிழைக்க வழி ஏற்பட்டிருக்கிறது.

மூலவரி ஆணைத் தொடர்கள் (Source Codes) தொலைந்து, இயங்குகிற பிரதி (Executable) மட்டும் உள்ள நிறுவனங்களும் நிறைய உள்ளன.

அதை மட்டும் வைத்துப் பூச்சி பிடிப்பது மகா சிரமமான காரியம் என்பதால், எதற்கு வம்பு என்று எல்லாவற்றையுமே தூக்கிக் கடாசி விட்டுப் புதிதாக எழுதவும் திட்டம் தீட்டு கிறார்கள்.

இந்த வகையிலும் நம்ம ஊர் புரோகிராமர் களுக்கு யோகம் அடிக்கப் போகிறது என்று பட்சி சொல்கிறது.

— இரா. முருகன்

பலாப்பழத்துக்கு ஆசைப்பட்ட ஒரு நம்பூதிரியோட கதை இது. எட்டுப் பத்து வருஷத்துக்கு முன்ன, கேரளத்துக் கண்ணனூர்ல நடந்ததாம். போன வருஷம் நான் கண்ணனூர் போயிருந்தப்ப நண்பர்கள் சொன்னாங்க.

ஒரு நம்பூதிரி. பழைய ஆளு. வயசு அம்பத்தஞ்சு அறுபது இருக்கும். தன் மக வீட்டுக்குப் போயிருக்காரு. மக வீட்டு முற்றத்தில ஒரு பலாமரம் நின்னுருக்கு. நல்ல வருக்கைப் பலா. உரல் உரலா நிறைய காய்ச்சிக் கிடக்கு.

பலாப்பழம்னா நம்பூதிரிக்கு உயிரு. வாழ்ந்து கெட்ட மனுஷன். நல்லாச் சாப்புட்டு அனுபவிச்சவரு. பலாவப் பார்த்ததும் அவருக்கு ஒரு சபலம். நோட்டம் விட்டபடியே சுத்தி வந்திருக்காரு. அவரோட கெட்ட காலம், கமகமன்னு மரத்துல இருந்து வாசம் வருது. கண்டுபிடிச்சுட்டாரு. மூணாவது கிளையில அணிலு துளைச்சிட்டிருக்குதே... அதுதான் பழம். அணில் கடிச்ச இடத்துல இருந்து சொட்டுச் சொட்டாக் கனி (தேன்) வடியுது. செக்கச் செவேல்னு அசலான செம்பருத்தி இனம்... ஆஹா பழத்தை அறுத்தா ஒவ்வொரு சுளையிலயும் உள்ளங்கை அளவு கனி வடியுமே. பலாப்பழப் பாயாசம் பண்ணினா எப்படி இருக்கும்! வாயில சளசளன்னு தண்ணி ஊறுது அவருக்கு.

நேரே மகளக் கூப்பிட்டுப் பழத்தக் காமிச்சாரு நம்பூதிரி. பழத்தை அப்பாவுக்குக் குடுக்குறதில மகளுக்கு ஏக சந்தோஷம். ஆனா, எப்படிப் பறிக்கிறது? புருஷன் வீட்ல இல்லை. இருந்தாத்தான் என்ன - ஏறிப் பறிக்கிற சாமர்த்தியம் அவருக்குக் கிடையாது. ஆபத்துக்குப் பாவமில்லைன்னு, பக்கத்து வீட்டுப் பையனைக் கூப்பிட்டா. பையன் ஏழை - கூலி வேலைக்குப் போகக் கூடியவன். சட்டையைக் கழட்டிட்டு, வேட்டிய தாறுபாய்ச்சிக் கட்டிட்டு, சரசரன்னு அணில் மாதிரி மரத்துல ஏறிட்டான். நேரே போயி அந்தப் பழத்த வாளியோட (காம்போட) அடர்ந்து கைத்தாங்கலாக் கொண்டு வந்துட்டான்.

முரட்டுப் பழம். நம்பூதிரிக்கு ஏகப்பட்ட சந்தோஷம். பழமாகவே திங்கலாம். சக்கைப் பிரதமன் (பலாப்பழப் பாயாசம்) வைக்கலாம். மீதியில அல்வா கிண்டி, பரணியில போட்டு வச்சா ஆறு மாசம் இருக்கும். மடியில இருந்து ஒரு அம்பது காசு எடுத்துப் பையன்கிட்ட நீட்டுனாரு. "சிச்சி, இதுக்கெல்லாம் காசு வாங்குவாகளா"ன்னு வெட்கப்பட்டுட்டுப் போயிட்டான் பையன்.

பழத்த சாக்குல போட்டு ஜோராக்கட்டி, தகப்பன் கையில குடுத்தா மக, பஸ்ஸுக்குக் காசு இருக்குதான்னா. இருக்கு, போரும்னுட்டாரு.

பழம் சரியான கனம். தோள அழுத்துது. ஆனா அந்த வாசம்! அவர் பாட்டுக்கு ஏத்தத்துல ஏறி, இறக்கத்துல இறங்கி, ரெண்டு இடத்துல இறக்கி வச்சு ஓய்வெடுத்து, கண்ணனூர் பஸ் ஸ்டாண்டுக்கு வந்து சேர்ந்துட்டாரு. அங்கிருந்து பஸ் ஏறி, இடையில் இறங்கி, தன் ஊருக்குத் திரும்பவும் கொஞ்ச தூரம் நடக்கணும். சிரமமான காரியந்தான். அதனால் என்ன? பலாப்பழம் சாதாரணமானதா? பழ வாசனை பஸ் ஸ்டாண்டைக் கலக்குது. போறவன் வாறவனெல்லாம் எட்டி எட்டிப் பார்க்குறான்.

அன்னிக்குப் பார்த்து அவருக்கு யோகம் - பத்து நிமிஷத்திலேயே பஸ் வந்துருச்சு.



# பொன்னீலன்

# ஆசை

ஆனால கூட்டம்தான் தாங்க முடியல. எல்லாரும் ஏறுறது வர, காத்தே நின்னாரு. அதுக்குப் பிறகும் பஸ்ஸுக்குள்ள நுழையிறது சிரமமாத்தான் இருந்துது. ஒவ்வொருத்தரையா கெஞ்சி, பாதையுண்டாக்கி, வாசல் அண்டையே சீட்டுக்கு அடியில - பழத்தைத் தள்ளுனாரு. அப்பாடா, இனி கவலை இல்ல. ஊர் போயிடலாம். போனதும் பழத்தை அறுத்து... பழத்தை அறுக்கும்போது அவர் மனைவியும், மக்களும், பேரப்பிள்ளைகளும் சூழ்ந்து ஆவலோட பார்த்துக்கிட்டு நிக்கப் போற அற்புதக் காட்சி அவர் மனசில விரியுது. ஆஹா... கம்பியில சாஞ்சுக்கிட்டே, சவரம் பண்ணுன நெற்றியையும் முகத்தையும் துண்டால துடைச்சுக்கிட்டாரு. வியர்வை ஊத்துது.

"சக்கப் பழம் யாரோடது?" முரட்டுக் குரல் ஒண்ணு நம்பூதிரியோட கடுக்கன் போட்ட செவியில திடுக்குன்னு இடிக்குதா, திரும்பிப் பார்த்தாரு. இளம் வயசுக்காரர் ஒருத்தர் குனிஞ்சு நின்னு பழத்தை சீட்டுக்கு அடியில இருந்து வெளியே இழுத்துக்கிட்டிருக்கார்.

"என்னோட பழந்தான்பா. அங்கேயே இருக்கட்டும். விட்டுடு." அனாவசியமா ஏன் இவன் நம்மைத் தொந்தரவு பண்ணுறான் என்கிற எரிச்சல்ல கொஞ்சம் சூடாவே சொன்னார் நம்பூதிரி.

இளம் வயசுக்காரர் பழத்தை விட்டுட்டு நிமிர்ந்தார். தடிச்ச உடம்பு. தலை கூரையில இடிச்சிது. தேள் கொடுக்கு போல நிமிர்ந்த மீசை... நம்பூதிரியை முறைக்கிறார் அந்த ஆளு.

"அஞ்சு ரூபா எடும்!"

பெரியவர் கிராமத்து ஆள். ஒண்ணும் புரியல்ல. இளைஞனோட முரட்டுத்தனமும் பிடிக்கல. உறுமுறாரு! "பழம் என்னோடதுப்பா. என் மக வீட்ல இருந்து கொண்டு வர்றேன்.

"பழம் ஒம்மோடதுதான்யா!" தலப்பா கட்டுன தலையை அழுத்தமா ஆட்டுறாரு அந்த ஆளு. "ஆனா, இந்த பஸ் ஸ்டாண்டு என்னோடது. இதுக்குள்ள சாமான்கள ஏத்தவும் இறக்கவும் உரிமையுள்ள ஒரே ஆள் நான்தான், புரியுதா? சக்கையை என்கிட்டே குடுத்துத்தான் நீரு பஸ்ல ஏத்தியிருக்கணும். பரவால்ல, கூலி அஞ்சு ரூபா குடுத்துடும்."

பெரியவருக்கு எதுவுமே புரியல. கேக்கறாரு, 'யாருப்பா நீ?'ன்னு!

"நான்தான்யா போர்ட்டர்! உம் பணத்தை எடும்?" ஆளுகளுக்கு இடையிலோடி கையை நீட்டுறாரு போர்ட்டர். முரட்டுக்கை. தடிச்ச விரலுக. ஒவ்வொரு கணுவுலயும் முள்ளு முள்ளா ரோமம்... நம்பூதிரி பயந்து போனாரு. ஆனாலும் விடல்ல.

"என் சக்கையை சர்க்கார் பஸ்ல ஏத்துறதுக்கு ஒனக்கு எதுக்குத் தரணும் பணம்?"

அந்த ஆளுக்குக் கண் சிவந்துட்டுது. புலி மாதிரிச் சீறுறாரு. "சக்கை உம்மோடதுதான்யா. ஆனா, இந்த பஸ் ஸ்டாண்டுல சாமான்களை ஏத்தி இறக்குற உரிமை என்னோடது, புரியுதா?

## நினைவுபடுத்துகிறோம்...

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டிக்கு சிறுகதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

**முழு விவரங்களுக்கு சென்ற இதழைப் பாருங்கள், அல்லது அடுத்த இதழ் வரும்வரை காத்திருங்கள்.** - ஆர்.

இந்தாப் பாரு லைசென்சு. ஒருத்தன்கிட்டே இருந்து இருபத்தி எட்டாயிரம் கொடுத்து வாங்கியிருக்கேன். எடும்யா பணத்தை!"

போர்ட்டர் சொல்லுறது நியாயமான காரியம்தான்னு மற்ற எல்லா பிரயாணிகளுக்கும் தெரியும். கம்முன்னு உக்காந்திருக்காங்க. ஒண்ணு ரெண்டு பேரு நம்பூதிரியக் கண்டிக்கக் கூடச் செய்தாங்க. ஆனா நம்பூதிரி சரியான கிராமத்து ஆளு. அவருக்குப் புரியவே இல்ல.

தகராறு வலுத்துது.

இதுக்கிடையில டிரைவர் வண்டியில ஏறி இஞ்சினக் கிளப்பிட்டாரு. 'ட்ரு... ட்ரு...'ன்னு அது ஆடிக்கிட்டு நிக்குது. போகச் சொல்றதுக்காகக் கயித்துல கையை வச்சாப்பல நின்னுட்டிருக்காரு கண்டக்டர்.

"பணத்தைக் குடுத்துப் பிரச்னையை முடிங்கோ பெரியவரே, நேரம் ஆகுது."

பஸ் காசு போக, பெரியவர் கிட்டே மிச்சம் இருந்தது நாப்பத்தஞ்சு காசுதான். என்ன பண்றது? "சிரமத்தோட சிரமம், வீடு வர இரண்டரை மைலும் நடந்து போயிடுவோம்" அப்படீன்னு முடிவு செஞ்சார். கூட்டத்துக்கிடையே நுழைஞ்சு, வாசல் பக்கம் போயி, குனிஞ்சு, சீட்டுக்கு அடியில கை விட்டுப் பலாப் பழத்தை வெளியே இழுத்தார்.

"என்ன பண்றீரு?" ஒரு வெடி போட்டார் போர்ட்டர். காலால பழத்தை மிதிச்சு அமுக்கிக்கிட்டாரு.

பரிதாபமா அவரை ஏறிட்டுப் பார்த்தாரு நம்பூதிரி, "வேணாம்பா. காசில்ல. சக்கையை தோள்ல சுமந்துக்கிட்டே ஊர் போயிடுறேன்."

"ஏத்துனதுக்குக் கூலி குடுக்கவே வக்கில்ல, இறக்கப் போறீரா? அதுக்கு வேற அஞ்சு ரூபா தனியாக் குடுக்கணுமே - வச்சிருக்கீரா?" கடுகடுக்குறாரு போர்ட்டர்.

நம்பூதிரிக்குக் கண் பிதுங்குது. 'பேராசை பெருநஷ்டம்'னு பெருமூச்சு விடறாரு.

"சரி சரி, பேசாம நாலு ரூபா குடுத்துட்டு பஸ்லயே போய்த் தொலையும்." பெரியவர் மேல் அனுதாபப்பட்டுச் சலிப்போடு சொன்னார் போர்ட்டர்.

தடுமாறிக்கிட்டே எந்திரிச்சார் பெரியவர். சக்கப் பிரதமன் ஆசையே வள்ளிசா அத்துப் போச்சு. இந்தச் சிக்கல்ல இருந்து தப்புறது எப்பிடி? ஒரே முடிவுதான்.

"இந்தாப்பா. என்கிட்டே காசில்ல. சக்கையை நீயே வச்சுக்க, என்னை விட்டுடு!" அப்படீன்னு சொல்லிட்டு, படக்குன்னு கீழே இறங்கி நடக்க ஆரம்பிச்சார்.

போர்ட்டருக்கு அசாத்திய கோபம். கீழ்ப் படியில இறங்கி நின்னு கத்தினார்.

"யோவ், பணத்தைக் குடுத்துட்டுப் போம்யா. ஒம்ம சக்க எனக்கு எதுக்கு? சந்தையில போனா அஞ்சு ரூபாய்க்கு ரெண்டு வாங்கலாம்... யோவ், பணத்தைக் குடுத்துட்டுப் போய்யா."

போர்ட்டர் கீழே குதிச்சதும், நம்பூதிரி ஓட்டம் எடுக்கத் தொடங்கினார். போர்ட்டர் துரத்தினார்.

"யோவ் பெரிசு, நில்லுய்யா! பணத்தைக் குடுத்துட்டுப் போய்யா! மூணு ரூபாயாவது குடும்யா..."

மின்னல் போலப் பாய்ஞ்சு, ஒரு நாலு மாடிக் கட்டடத்துப் பின்னாடி மறைஞ்சார் பெரியவர். இந்த வேடிக்கையை ரசிச்சு பஸ் ஸ்டாண்டே குலுங்கிக் குலுங்கிச் சிரிச்சுது.

பிரச்னை தீர்ந்ததுன்னு பெல் குடுத்தாரு கண்டக்டர். அனாதையாக் கிடந்த பலாப் பழத்தைக் காலால உருட்டிக் கீழே தள்ளினாரு.

"ரைட், போகலாம்!"

அந்த விஸ்தாரமான பஸ் ஸ்டாண்டு நடுவுல, ஆசையின் சின்னமா அந்த 'வருக்கைப் பலாப்பழம் அனாதையாக் கிடந்துது.



**தி**

**யாகம் செய்யவும் மன்னிக்கவும் நன்றி கூறவும் தெரிந்து கொண்டுவிட்டால் - மகிழ்ச்சியையோ, அமைதியையோ தேடி ஓட வேண்டியதில்லை. அவையே நம்மைத் தேடி வரும்!**

**- ஜோசப் நியூட்டன்**

**தகவல் : எஸ். எஸ். பூங்கதிர்**




# TAMILNAD HOSPITAL LIMITED

Cheran Nagar (Off Velachery - Tambaram Road),
Madras 601 302. Phone : 2375221,2377707.
Fax : 2375229. Telex : 041-26053 TNH IN.




## SERVICES OF THE DEPARTMENT OF GASTROENTEROLOGY

### ENDOSCOPY PROCEDURES NEW PENTAX VIDEO SYSTEM EPM 3300 WITH ZOOM FACILITY

1. Gastroscopy
2. Sclerotherapy of Varices
3. Esophageal Stricture dilatation
4. Stenting for Esophageal growth (Endoprosthesis Placement)
5. Polypectomy
6. Bleeding Ulcer Hemostasis
7. Percutaneous Endoscopic Gastrostomy (PEG)
8. Pyloric Stenosis Ballon Dilatation
9. Proctosigmoidoscopy
10. Flexible sigmoidoscopy
11. Total colonoscopy
12. Colonic Polypectomy
13. ERCP (Endoscopic Retrograde cholangio Pancreatography)
14. Sphincterotomy of Ampulla
15. Biliary and Pancreatic Brush Cytology
16. Biliary Stent Placement
17. Basketing of CBD Stones
18. Nasobiliary drainage

### SERVICES

1. Work up for Patients with
   - (a) Chronic Diarrhea
   - (b) Gastroenteritis
   - (c) Vomiting
   - (d) Swallowing difficulty
   - (e) Alcoholism
   - (f) Jaundice
   - (g) Abdominal pain
   - (h) Weight Loss and Anaemia
   - (i) Rectal Discharge and bleeding
2. Irritable Bowel Clinic
3. Colitis Clinic (Ulcerative colitis)
4. Chronic Hepatitis (Liver)
5. Alcoholic Liver Clinic
6. Peptic Ulcer Clinic
7. Early Detection of Cancer in
   - (a) Stomach
   - (b) Esophagus
   - (c) Colon, Rectum
   - (d) Pancreas
   - (e) Liver
8. Nutrition councelling
9. Enteral and Parenteral Feeding

# கால் விரலைக் காணோம்!

## ராத்திரி தூங்கப் போகும் போது இருந்த சுண்டு விரல், காலையில் எப்படிக் காணாமல் போகும்?



**டோ**ரிஸ் (65), ரிடையர் ஆன நர்ஸ். அமெரிக்காவில் ஃப்ளோரிடாவில் வசிக்கிறார். ஒரு நாள் காலை தூங்கி எழுந்த போது அவருக்கு ஷாக்! அவரது வலது கால் சுண்டு விரலைக் காணோம்! ராத்திரி தூங்கப் போகும்போது இருந்த சுண்டு விரல், காலையில் எப்படிக் காணாமல் போகும்? டாக்டரிடம் போன போது, "விரலைக் கீறி எடுத்தாற் போல இருக்கிறது. உங்களுக்குத் தெரியாமல் உங்கள் கால் விரலை வெட்டி எடுப்பது சாத்தியமில்லையே!" என்று குழம்பினார்.

அடுத்த சில நாட்களில், மறுபடி ஒரு கால் விரலைக் காணோம். இரண்டு மாத காலத்தில், டோரிஸ் இழந்த விரல்கள் நான்காக உயர்ந்தன!

முடியைப் பிய்த்துக் கொண்டார் டாக்டர் ஹாரி ஃபாக்ஸ். எப்படி ஒருவருக்குத் தெரியாமல், அவரது கால் விரல் மாயமாய் மறையும்? கேள்வி அவரது மண்டையைக் குடைந்தது.

மருத்துவப் புத்தகங்களைச் சல்லடை போட்டுப் பார்த்தும், இதுமாதிரி அதிசயத்துக்கு அவரால் விடை காண முடியவில்லை. அவருடைய மற்ற டாக்டர் நண்பர்களாலும் புதிருக்கு விடை காண முடியவில்லை.

ஒரு வழியாய், டோரிஸின் பக்கத்து வீட்டுக்காரப் பெண்மணி மூலம் புதிருக்கு விடை கிடைத்தது!

விரல்கள் மாயமாய் மறையக் காரணம் டோரிஸின் செல்ல நாய்க்குட்டிதான். கட்டிலில் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கும் டோரிஸின் கால் விரலை, கடித்துச் சுவைத்துக் கொண்டிருந்தது அவரது நாய்! ஜன்னல் வழியே இதைப் பார்த்துவிட்டு, சப்தம் போட்டு, அவர் டோரிஸை எழுப்ப, நாய் விரலை ஸ்வாஹா செய்து விட்டு, சாது போல டோரிஸ் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டது.

காரணம் தெரிந்தவுடன், விளக்கம் தருவது டாக்டர்களுக்குக் கஷ்டமாக இல்லை.

டோரிஸுக்குக் கடும் சர்க்கரை வியாதி. விளைவு : கால் பகுதி, வலி தெரியாத அளவுக்கு உணர்ச்சியற்றுப் போனது. டோரிஸ் தூங்கும்போது, நாய் விரலைக் கடித்தது தெரியவில்லை!

ஆதாரம் : **'நியூ பேப்பர்'**

தகவல் : **மௌஷ்மி**



# இந்திர கலச

விஷ்வக்சேனன்

## 20. கொடியன் காடவராயன்!

**கா**விரியின் கரையெங்கும் கோயில்களை எழுப்பிய சோழ வம்சத்து மன்னன் ஆதித்தனுக்கு, தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன்னம்பலமாக்க உதவியது காஞ்சனமலை. சோழ நாடு அன்னியர் வசப்பட்டு விட்டதால் இருநூறு ஆண்டுகளுக்கு மேல் தன் ரகசியத்தை இறுக மூடிக் கொண்டது அந்த மலை!

கொங்கு மண்டலத்தின் கீழ்ப்பந்துறை நாட்டின் எல்லையில் நின்றிருந்த அந்த மலை, தன்னைச் சுற்றிலும் அடர்ந்த மரங்களையும், புதர்களையும், காட்டுக் கொடிகளையும், செடிகளையும் அத்தமாகப் படரவிட்டு, மனித சஞ்சாரமே அடியோடு இல்லாமல் அடித்திருந்தது.

தனது ரகசிய வாயில்கள் அனைத்தையும் மூடிக் கொண்டு, பெயரில் கூட அது வெளிப்பட்டு விடக் கூடாதென்பதற்காக, கஞ்சமலையெனப் பெயரைச் சுருக்கிக் கொண்டாலும், அந்த ரகசியத்திற்கும் கசிவு ஏற்படுத்தும் வடிகால் உண்டு என்பதை நிரூபிக்கும் வகையில் அந்த மலையிலிருந்து உற்பத்தியாகி, தெற்கு நோக்கி விரைந்தது ஒரு சிறிய நதி. தன் இருகரைகளிலும்பிருந்த மணலைப் பொன்மயமாக அடித்து, கஞ்சமலையின் ரகசியத்தை பகிரங்கப் படுத்த முயன்று கொண்டிருந்தது அந்த நதி!

பொன்னை அள்ளி வந்ததால் காவிரிக்கு ஈடாகப் பொன்னி நதியென்று பெயர் பெற்ற அந்த நதி, சோழ வம்சம் சீர்குலைந்து போனதாலும், கொங்கு நாட்டில் போசளரால் அதர்மம் பெருகியதாலும் தன்னை சிறு ஓடையாகச் சுருக்கிக் கொண்டிருந்தது மட்டுமின்றி, தனது பாதையைச் சுற்றி மாற்றிக் கொண்டு, மகிழ மரங்கள் நிறைந்த வனப்பகுதியை அடுத்த மருடஞ்சாவடியென்ற சிறு ஊரையொட்டி ஓடி, மனித கண்களுக்குப் புலப்படாமல் தப்பவும் முயன்று கொண்டிருந்தது.

அதிகம் பயன்படுத்தப்படாததால் அந்த ஓடையை ஒட்டிச் சென்ற பாதையில் செடி கொடிகளும் கோரைப் புற்களுமாக அடர்ந்து கிடந்தன. மலையிலிருந்து சரிந்து இறங்கிய அந்தப் பாதையில் காடவமன்னன் கோப்பெருஞ்சிங்கனின் வீரர்கள் அரக்கர்களைப் போல அந்த முன்னிரவு நேரத்தில் வந்து கொண்டிருந்தனர்.

கிருஷ்ண பட்சத்து நிலவு கான கத்து மரங்களை ஊடுருவ முயன்று தோற்றுக் கொண்டிருந்தது. சந்தேகத்தின் வசப்பட்ட மனித இதயம் போல இருளடித்துக் கிடந்த அந்த மலைப் பாதையில் வரிசையாக இறங்கிக் கொண்டிருந்தன பொதி வண்டிகள். பாதை கரடு முரடாக இருந்ததன்றி சரிந்து இறங்கியதாலும், பொதிகளை இழுத்த காளைகள் சரிவில் வேகமாக இறங்க முற்பட்டதாலும் அவற்றை அடக்கவும் பொதிகள் சரியாதிருக்கவும் காடவ வீரர்கள் பெரிதும் சிரமப்பட வேண்டியிருந்தது. பொதிகளின் முன்னால் புரவிகளில் வந்த வீரர் பதின்மரும் கறுத்த பெரும் உருவங்களுடனும், பாதிக்கு மேல் முகத்தை மறைத்த மீசைகளுடனும், இடையில் தரித்த பெரும் பட்டாக் கத்திகளுடனும் அசல் அரக்கர்களாகவே தெரிந்தனர். அதிலும் முன்னதாகப் புரவியில் வந்தபடியே பாதையை நோட்டம் விட்டபடி வந்தவன் அரக்கர் குலத்திலிருந்து தப்பி மனித குலத்துக்கு வந்தவனாகவே தெரிந்தான்! கொழுத்துப் புடைத்திருந்த அவன் முகமும் சிவந்து கிடந்த விழிகளும் அந்த மனிதனின் உண வில் மதுவும் மாமிசமும் ஏரான

மாக இருக்க வேண்டுமென்பதை வலியுறுத்தின. அவன் வலது கரத்தில் கட்டப்பட்டிருந்த கங்கணமும், காடவ இலச்சினை பொறிக்கப்பட்ட பெரு வாளும், அவன் பார்வையில் தெறித்த ஆணவமும் அவன் ஒரு சாதாரண வீரனல்ல என்பதை



உணர்த்தின. காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கனுக்கு அடுத்த படி, பட்டத்துக்குரியவனும், அவன் வளர்ப்பு மகனுமாக சியன் காடவராயனாகத்தான் அவன் இருக்க வேண்டும் என்பதை அந்த தோற்றம் வலியுறுத்திக் கொண்டிருந்தது.

காடவராயன் சட்டென்று புரவியை நிறுத்தினான். பாதை சரிந்து கீழிறங்கி, கிழக்கு நோக்கிச் சமதளத்தை அடையும் வளைவில் யாரோ ஒருவர் நிற்பது புலப்பட்டது அவனுக்கு. வண்டிகளை நிறுத்த உத்தரவிட்டவன், புரவியை முன்னால் செலுத்தி, நின்று கொண்டிருந்தவரை மெள்ள நெருங்கினான். மங்கலான நிலவொளியில் சடாமுடியுடனும் நீண்ட தாடியுடனும் நெடுநெடுவென்று உயர்ந்த தேகத்திலும் நெற்றியிலும் பன்னிரு திருமண் காப்பும் பளிச்சிட, இருளை ஊடுருவிய பெருவிழிகள் மின்ன, நின்றிருந்தவரை நெருக்கத்தில் பார்த்ததும் அவன் உதடுகள் "மாறன் அமுதனார்!" என்று உச்சரித்தன. அவன் முகத்தில் எல்லையற்ற திகிலும் படர்ந்தது.

அதர்மத்தின் வழியில் செல்பவனுக்கு, எத்தனை

படைபலமும், அதிகாரமும், இருந்தாலும் தர்மத்தின் வழியைப் பிரதானமாக எண்ணி நடக்கும் மனிதரைக் கண்டால் அச்சம் தோன்றத்தான் செய்கிறது. தர்மத்தின் சக்தி அது! நெடு நெடுவென்று நின்ற பாண்டியர் குலகுருவைக் கண்டதும் காடவராயன் மனதில் அச்சம் பிறந்தது. வாட்களையும் வேல்களையும் ஏந்திய வீரர்கள் தனக்குப் பின்னே வந்து கொண்டிருந்தாலும் தானே முன்னின்று எத்தனையோ கொலைகளையும் கொள்ளைகளையும் நடத்தியிருந்தாலும் காடவராயனின் நெஞ்சு நடுங்கியது.

"ஏன் நின்று விட்டாய் காடவராயா? வா. உனக்காகத்தான் காத்திருக்கிறேன்" என்று கனிவு நிரம்பிய குரலில் மாறன் அமுதனார் அடுத்து விடுத்த அழைப்பு, அவன் மனத்தில் இன்னும் திகிலை மூட்டியது.

பல தினங்களாக உணவின்றிப் பசித்திருக்கும் வேங்கையொன்றை நெருங்குபவன் போல, மெள்ள அவரை நெருங்கியவன் "தாங்கள் இந்த நேரத்தில் இங்கு எப்படி வந்தீர்கள்?" என்றான்.

"உன்னைக் காப்பாற்ற"- அமுதனாரின் பதில் அதே கனிவுடன் வந்தது.

"என்னைக் காப்பாற்றவா?"- காடவராயன் கேள்வியில் திகைப்பு ஒலித்தது.

"ஆம்! உன்னை மட்டுமல்ல, உன் மன்னனையும் காப்பாற்ற..." என்றவர், "அந்த பொதி வண்டிகளில் என்ன இருக்கிறது காடவராயா?" என்று சாவதானமாகக் கேட்டார்.

காடவராயன் பதில் கூறாமல் விழித்தான்.

அதே அமைதி நிரம்பிய குரலில் அமுதனார் தொடர்ந்தார். "காடவராயா! பொதி வண்டிகளில் இருப்பவை என்ன என்பதை நான் அறிவேன். அவை உனக்கோ எனக்கோ சொந்தமானவையல்ல. அரங்கனையும், தில்லையம்பதியையும் சேர வேண்டியவை. இதற்கு முன் இங்கிருந்து கொண்டு சென்றவற்றையும், இந்தப் பொதிகளையும் நீயாக ஒப்படைப்பதானால் நான் கூறியபடி உன்னையும் உன் மன்னனையும் காப்பாற்றுகிறேன்..."

பாண்டியர் குலகுருவைக் கண்டதால் காடவராயன் மனத்தில் தோன்றியிருந்த அச்சம், அவர் வார்த்தைகளைக் கேட்கக் கேட்க ஆத்திரமாக மாறியது. இத்தனை வீரர்களுடன் வரும் தன்னை இருளில் வழிமறித்து, அச்சுறுத்தி, பொதிவண்டிகளை ஒப்படைக்கக் கூறும் அந்தக் துறவியை ஏறெடுத்து நோக்கிய காடவராயன், "துறவியாரே! தங்களுக்கெதிராக நான் வாளை உயர்த்த விரும்பவில்லை. அந்த நிலைக்கு என்னை ஆளாக்காதீர்கள். வழியை விட்டு விலகிப் போங்கள்!" என்றான்.

அமுதனார் விடுவதாக இல்லை.

"ஆத்திரம் அறிவுக்குச் சத்ரு காடவராயா. நான் கூறுவதை ஏற்றுக் கொள். அழிவிலிருந்து காத்துக் கொள்ளலாம்..." என்றார் அமுதனார்.

"துறவியாரே! உம்மைப் பாண்டியர்கள் தெய்வமாக மதிப்பது எனக்குத் தெரியும். எமது பரம வைரியைச் சேர்ந்தவர் என்றாலும் உமது துறவிக் கோலத்திற்காக உம்மைக் கொல்லாமல் விடுகிறேன். வழியை விட்டு விலகி விடும்!" காடவராயனின் குரல் உள்ளே பொங்கிய ஆத்திரத்தில் உயர்ந்து ஒலித்தது.

"காடவராயா! நான் கூறுவதைக் கேள். இவை இறைவன் திருப்பணிக்குச் சேர வேண்டியவை. எத்தனையோ ஆண்டுகளாகப் புதைந்து கிடந்த ரகசியத்தின் ஒரு பகுதிதான் உன் மன்னனுக்குக் தெரியும். இதைப் பற்றிய முழு விவரமும் இப்பொழுதுதான் எனக்குக் கிடைத்தது. உன்னை இப்பாவச் செயலிலிருந்து மீட்கவே நான் ஓடி வந்தேன். ஆலயங்களுக்குச் சேர வேண்டியவற்றை அபகரிக்க எண்ணாதே! நீயாக ஒப்படைத்து விடு. ஆத்திரத்தை வளர்த்துக் கொள்ளாதே. அறிவுக்கு அது சத்ரு..." என்றார் அமுதனார் மீண்டும்.

"இப்பொழுது நீர்தான் எனக்குச் சத்ரு! வழியை விட்டு விலகப்போகிறாயா இல்லையா?" காடவராயன் ஒருமையில் இரைந்தான்.

மாறன் அமுதனாரின் முகத்தில் வருத்தம் படர்ந்தது. அடுத்து ஒலித்த அவர் குரலிலும் அது தொனித்தது. "வைகுந்தன் சித்தம் இப்படித்தான் என்றால் அதை மாற்ற நான் யார்?" என்றவர், தமது கரங்களைப் பலமாக இரு

## அருள்வாக்கு

ஊரிலே பலவிதமான அயோக்கியர்கள் இருக்கிறார்கள். அதைப் பார்த்து வாஸ்தவமாகவே ஒருவனுடைய மனசு கொதிக்கிறது. அவன் அந்தத் தப்பையெல்லாம் ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறான். 'அவன் அந்த அயோக்கியத்தனத்தைச் செய்தான், இவன் இந்த அயோக்கியத்தனத்தைச் செய்தான்' என்று சொல்லிக் கொண்டே இருக்கிறான். இவனுக்கு வாக்கும் மனசும் ஒன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் இவன் இப்படிச் சொல்வதால் இவனுக்கும் பிரயோஜனமில்லை, ஜனங்களுக்கும் பிரயோஜனமில்லை, தப்புச் செய்கிறவர்களுக்கும் பிரயோஜனமில்லை. இப்படி வியர்த்தமாக வாக்கும் மனசும் ஒன்றுபட்டிருப்பதைச் சத்தியம் என்று சொல்வதற்கில்லை.

ஒருவன் மனசில் கெட்ட எண்ணங்கள் எழுகின்றன. அதை அவன் அப்படியே வாக்கிலே வெளியிடுகிறான். அது சத்தியமாகிவிடுமா? ஆகாது.

ஆகவே சத்தியம் என்றால் வாக்கும் மனசும் ஒன்றுபடுவதுமட்டுமல்ல, நல்ல மனசிலே தோன்றுகின்ற நல்ல எண்ணங்களை வாக்கில் சொல்வதே சத்தியம். நல்ல விளைவுகளை உண்டாக்குவதே சத்தியம்.

மக்களுக்கு நன்மை பயப்பதாகவும் பிரியமாகவும் எது இருக்கிறதோ அதுவே சத்தியம் என்பதாக சத்தியத்துக்கு ஒரு லட்சணத்தை வகுத்திருக்கிறார்கள்.



**ஸத்யம் பூதஹிதம் ப்ரியம்**

பேச்சினாலும் காரியத்தினாலும் எண்ணத்தினாலும் பிராணிகளுக்கு நன்மையை உண்டாக்குவதே சத்தியம். கெடுதல் செய்வதெல்லாம் அசத்தியமே.

ஒருவனுக்கு நல்லதைச் சொன்னால் மட்டும் போதாது. அதை அவன் ஏற்றுக் கொள்ளுமாறு அன்புடன் சொல்ல வேண்டும். நல்லதைக் கூட கடுமையாகச் சொன்னால் அதை யாரும் ஏற்க மாட்டார்கள். இவ்வாறு நிஷ்பலனாகப் போகிற நல்ல வாக்கு சத்தியமாகாது. நல்லதாகவும் இருக்க வேண்டும்: அது யாரை உத்தேசித்துச் சொல்லப்படுகிறதோ அவனுக்கு இன்பம் தரும் விதத்தில் ஹிதமாகவும் சொல்லப்பட வேண்டும். இதுவே சத்தியம்.

"சத்தியத்தைச் சொல். பிரியமானதைச் சொல். சத்தியத்தைப் பிரியமாகச் சொல்ல முடியவில்லை என்றால் அப்போது அப்படிப்பட்ட சத்தியத்தையும் சொல்லாதே. கேட்கப் பிரியமாயிருந்தாலும், அசத்தியத்தைச் சொல்லாதே" என்பது பெரியோர் வாக்கு.

**ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத்**
**ந ப்ரூயாத் ஸத்யம் அப்ரியம்**
**ப்ரியம் ச ந அந்ருதம் ப்ரூயாத்**

காமமும் க்ரோதமும் உள்ள மனசிலிருந்து இப்படிப்பட்ட பிரியமான, நன்மையான வாக்கு வராது. க்ஷேமத்தையே உண்டாக்கும் சத்திய வாக்கு வரவேண்டுமானால் அதற்கு அடிப்படையாக காம, க்ரோதங்களற்ற நல்ல மனம் வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

முறை தட்டினார்.

சற்றுத் தள்ளியிருந்த மரமொன்றின் பின்னாலிருந்து பெரும் புரவியொன்று வெளி வந்தது. அதன் மீது உருவிய நீண்ட வாளுடன் ஒரு வாலிபன், அதே சமயத்தில் பின்புறத்தில் நின்ற பொதி வண்டிகளின் பக்கங்களில் மரங்களின் மறைவிலிருந்து திடீரென்று எரியும் பந்தங்கள் புலப்பட்டன.. வாட்களையும் வேல்களையும் தாங்கி வந்த வீரர்களும் வெளிப்படக் கண்ட காடவராயன் அமுதனார் சரியான முன்னேற்பாட்டுடன்தான் வந்திருக்கிறார் என்பதை உணர்ந்து சற்றுத் திகைத்தான். அடுத்த கணம் திகைப்பை உதறிக் கொண்டு பெரும் கூச்சலுடன் தனது பட்டாக் கத்தியை உருவியபடி அமுதனாரின் மீது பாயவும் செய்தான்.

அடுத்து நிகழ்ந்தது விபரீதம்! மரங்களின் பின்புறமிருந்து வெளிவந்த வீரர்கள் மீது காடவர்கள் பாய்ந்தனர். அதுவரை அடக்கப்பட்டு நின்ற காளைகள் சரிவான பாதையில் விடுபட்டதால் சுமைகளுடன் நிற்க இயலாது, வெகு வேகமாக தடதடவென இறங்கின. காளைகளின் ஒலியும், காடவ வீரர்களின் கூச்சலும், வாட்கள் மோதியதால் ஏற்பட்ட ஙிளாங் ஙிளாங்கென்ற ஓசையும், ஈட்டிகள் பாய்ந்ததால் எழுந்த மரணக் கூச்சல்களுமாக அந்த மலைப் பாதையில் முன்னிரவு நேரத்தில் ஒரு ரணகளம் சிருஷ்டியானது! இடையே, பொதி வண்டிகளை விட்டு விட்டு பாண்டிய வீரர்களின் மீது பாய்ந்த காடவர்களைத் தடுத்த யுவானின் சினத்துப் போர்க் கூச்சலும் எழுந்து, அந்த மலைப் பகுதியையும் காடவர்களையும் ஒரு கலக்குக் கலக்கியது.

காடவராயனின் பெரும் பட்டாக்கத்தி, மாறன் அமுதனாரின் மேல் பாய விடாமல் தடுத்த பாண்டிய இளவலின் மெல்லிய நீண்ட வாள், அனாயாசமாகச் சுழலத் தொடங்கியது. காடவராயனின் கண்களுக்கு முன்னும் மார்பு, தோள்களின் அருகிலும் அது அடிக்கடி தோன்றி மறைவதையும், அதன் அசுரச் சுழற்சியிலிருந்து தனது கனமான வாள் மீள இயலாமல் பல திசைகளிலும் திருப்பப்பட்டதையும் கண்டவன், ஆதித்ய பாண்டியனின் வாள் வீச்சைப் பற்றி அதுவரை தான் கேள்விப்பட்டது, எவ்வளவு உண்மை என்பதை உணர்ந்து கொண்டான்!

மிகுந்த சிரமத்துடன் தனது வாளை விடுவித்துக் கொண்டு மீண்டும் பாய்ந்த காடவராயன், ஆதித்யனின் வாள் வீச்சு சட்டென்று மாறி விட்டதையும் இரண்டொரு வீச்சுக் கொருமுறை அது தன் வாளை விலக்கி உடலில் கீறிவிட்டு அகன்றதையும் கண்டு, அந்த வீச்சின் முறையை நிர்ணயிக்க இயலாமல் திணறினான். அடுத்த இரண்டாவது நொடியில் காடவராயனின் வாள் அவன் கரத்திலிருந்து பறித்து இழுக்கப்பட்டு ஓடையின் பக்கங்களில் செழித்துக் கிடந்த கோரைகளின் நடுவே பறந்து சென்று விழுந்தது.

இரண்டு நாழிகை நேரமே நடந்த அந்தச்

சிறுபோர் முடிந்தபோது, எஞ்சிய காடவர்களையும், காடவராயனையும் ஒரு புறம் நிறுத்திய ஆதித்யன், அமுதனாரை ஏறெடுத்து நோக்கினான். அதுவரை ஏதோ சீடர்களின் வாட்பயிற்சியைப் பார்வையிடும் ஆசான் போல சர்வ சாதாரணமாக அந்தப் போரைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்த மாறன் அமுதனார், காடவராயனை நெருங்கினார். "காடவராயா, ஏற்கெனவே நான் கூறியபடி சேந்தமங்கலத்தில் இதுவரையில் கொண்டு சேர்த்திருக்கும் கொங்கு நாட்டுச் செல்வத்தை உன் மன்னனைக் கொண்டு வந்து ஒப்படைக்கச் சொல். இல்லையெனில் இன்னும் பத்து தினங்களில் உன் தலைநகர் முற்றுகையிடப்படும் என்று தெரிவித்து விடு!" என்றார்.

பதிலொன்றும் கூறாது அமுதனாரையும் ஆதித்யனையும் வெறித்த காடராயன் திரும்பத் தனது புரவியை நோக்கி நடந்தான். காடவ வீரர்களும் பின் தொடர்ந்தனர்.

'தென் திசையில் கங்கையெனும் திருக்கெடிலத் திளைத்தாடி....' என்று பெரிய புராணம் தென்னகத்து கங்கையாகவே வர்ணிக்கும் கெடில நதியின் வெள்ளம் உள்ளங்கையில் ஓடும் ரேகை போல மெலிந்திருந்தது. பெரும்பாலும் மணற்பரப்பாகவே கிடந்த நதியைக் கண்டு, சுற்றிலுமிருந்த வனப்பகுதியின் மரங்கள் மேகங்களை இரைஞ்சியதாலோ, அல்லது நல்லவர் எவரோ காடவ எல்லையில் அடியெடுத்து வைத்ததாலோ... தொடங்கியிருந்த மழை ஓங்கிப் பொழிய ஆரம்பித்திருந்தது. மெள்ள மணற்பரப்பை மூடத் தொடங்கிய வெள்ளம், சிறு செடிகளையும் கொடிகளையும் இழுத்தபடியே நுங்கும் நுரையுமாகக் கரைகளைத் தாக்கி மளமளவென்று உயரத் தொடங்கியது.

காடவர்களின் அந்தப் பகுதிக்கு மேகங்கள் மழையைப் பொழிந்தது கண்டு இயற்கைக்கே சினமேற்பட்டிருக்க வேண்டும்! அதனால் தானோ என்னவோ, நதிப் பகுதியை மட்டுமின்றி சற்றுத் தள்ளியிருந்த காடவர் தலைநகரான சேந்தமங்கலத்தின் மீதும் பெரும் வேகத்துடன் புயல் தாக்கத் தொடங்கியது.

இயற்கையின் சீற்றத்தைக் காட்டிய புயலின் வேகத்தையோ, முகத்தில் அறைவது போல பொழிந்த கன மழையையோ பொருட்படுத்தாது காடவர் தலைநகர் சேந்தமங்கலத்தை நோக்கி, மழையில் நனைந்தபடியே புரவியில் வந்து கொண்டிருந்தார் தஞ்சையின் சைவத்துறவியார்.

(தொடரும்)

# திட்டுங்

'டமால்' என்ற வெடிச் சப்தம் கேட்டு நடுங்கிப் போனது உடம்பு.

'பய புள்ளைங்க இப்படி திடும், திடும்னு வெடியைப் போட றாங்களே! காசுக்குப் புடிச்ச கேடு.'

பெரியசாமி முணுமுணுப்பாய்த் திட்டினார்.

இரண்டு பக்கமும் சீரியல்லாம்ப் தோரணங்கள். பத்தடி இடை வெளியில் டியூப் லைட்டுகளின் அணிவகுப்பு. நடுநடுவே வெடிச் சப்தம். லவுட் ஸ்பீக்கரில் சினிமாப் பாட்டு அலறல்.

"இவனுகளுக்கு அள்ளி, அள்ளிக் கொடுக்கிற மாதிரிதான் துள்ளு றானுக பயலுக. பேசிப் பேசியே கொள்ளையடிக்கிறான் அரசியல் வாதிங்க. இவனுக கைக்காசும், உழைப்பும்தான் விரயமாகுது. த்தூ."

பொருமியபடி எச்சிலைத் துப்பினார்.

"என்ன மாமூ, தூங்கலியா? எப்பவும் ஒன்பது மணிக்கெல்லாம் கட்டையைக் கிடத்திடுவீரு."

'கட்டையிலே போற மருதுப் பயலுக்கு வாய் ஜாஸ்திதான்.'

மனசுக்குள் திட்டினார். எதைப் பார்த்தாலும் எரிச்சல் வந்தது.

கண் அங்கங்கு வேடிக்கை பார்த்தா லும், முடிவில் அந்தக் கட்டிலில்

கிருஷ்ணா



போய்த்தான் நிலைத்தது.

**"பெ**ரிசு, கொஞ்சம் உதவி பண்ணு. உன் மரக்கட்டிலை எடுத்துக்கறோம்!"

மளிகைக்கடை பையன் வேலு, கூட நாலு ஆட்களுடன் வந்து கெஞ்சினான் ஏழு மணிக்கு.

"எதுக்குலே என் கட்டிலு?"

"தலைவர் ஏறி நின்னு பேசத்தான்!"

"போங்கடா, போக்கத்த பசங்களா!"

"மனசு வையி பெரிசு. உனக்கு ரெண்டு கருட்டு வேணா வாங்கித் தரோம். ஏற்பாடு செஞ்சிருந்த ரெண்டு பெஞ்சிலேயும் காலு ஆடுது. ஆறேழு பேர் ஏறி நிப்பாங்க. தாங்குமோ, தாங்காதோ? டேய் கைபிடிங்கடா!"

சட்டென கட்டிலைப் பிடித்துத் தூக்கிக் கொண்டு போய்விட்டனர்.

பெரியசாமிக்கு மறுக்க முடியவில்லை. மறுத்தும் பயனில்லை என்று புரிந்து போனது.

கட்டிலில் படுத்தால்தான் தூக்கமே வரும் அவருக்கு. கிட்டத்தட்ட பத்து வருஷமாய் பழக்கமாகிவிட்டது. வாசலில் கட்டிலைப் போட்டு நட்சத்திரங்களைப் பார்த்தபடியே தூங்கிப் போவது வழக்கம். வேறு எங்கு படுத்தாலும் தூக்கம் வராது, சரியாய்.

**ம**றுபடியும் 'டமால்' சப்தம். நாலைந்து முறை வெடித்து ஓய்ந்தது.

அந்த இடம் முழுவதும் புகை மண்டலம். தெருப் பையன்கள் அரை டிராயரை இழுத்துப் பிடித்தபடி 'ஹோ' என்ற கத்தலுடன் ஓடினர்.

இப்போது லவுட் ஸ்பீக்கரில் தலைவரின் பேச்சைப் போட்டிருந்தார்கள். டேப் செய்யப்பட்ட பழசு.

"என்ன சாமி, வேடிக்கை பாக்குறீகளா?"

பெட்டிக்கடை சண்முகம் பீடியைப் பற்ற வைத்தபடி அருகில் வந்தார். தீக்குச்சியின் கந்தக நாற்றம், பீடிப்புகையுடன் சேர்ந்தடித்தது.

"வேறு என்ன செய்யறது? என் கட்டிலைப் பிடுங்கிக்கிட்டுப் போயிட்டானுக. அதுல படுத்தாத்தானே தூக்கம் வரும்? மணி வேற பத்தாச்சு."

"நீங்களாவது கட்டிலைத்தான் கொடுத்தீக. திரும்பி வந்துடும். என்னிடம் இருநூறு ரூபாய் காசைப் பிடுங்கிக்கிட்டானுக. உழைச்ச காசு, எப்படி வெட்டியாச் செலவாகுது பாத்தீகளா?"

ராக்கெட் வெடி சர்ரென்று மேலே சென்று வெடித்தது.

"ஐயா, கொஞ்சம் தள்ளிக்குங்க."

எலெக்ட்ரீஷியன் ஒருவன் சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தி, பின் கேரியரில் ஏறி நின்றான். டெஸ்டரை வைத்து சீரியல் லாம்ப்பை டெஸ்ட் செய்தான். அவன் கைபட்டதும் எரியாமலிருந்த பல்ப் வரிசையாகப் பளிச்சிட்டது.

"அந்த டியூப் லைட்டையும் கவனிங்கண்ணே."

ஒருவன், கண் சிமிட்டிய லைட்டை கைகாண்பித்தான்.

"ஏன் இன்னும் தலைவரைக் காணோம்?" என்று கேட்டார் சண்முகம், அவனிடம்.

"வந்துடுவாரு. அங்கங்கே கொடி ஏத்தி அஞ்சு நிமிஷம் பேசிட்டுத்தானே வரணும். நரியன் தெரு தாண்டியாச்சு."

மைக்கில் 'அலோ', 'அலோ' என்றான் ஒருவன்.

"இளம் புயல், புரட்சித்தங்கம் தலைவர் இன்னும் சிறிதுநேரத்தில் இங்கு வந்து நம் கட்சிக் கொடியை ஏற்றுவார்."

"மாவீரன் நெப்போலியனைப் பார், நேதாஜியைப் பார்" என்று பார்க்க முடியாதவர்களை எல்லாம் பார்க்கச் சொன்னது தலைவரின் குரல் லவுட் ஸ்பீக்கரில்.

"இந்தக் கொசு சனியன் வேற!"

தோளில் கிடந்த துண்டால் இரண்டு பக்கமும் முதுகில் விசிறினார் பெரியசாமி.

"சீக்கிரம் கூட்டத்தை முடிச்சு, கட்டிலைக் கொடுத்துட்டா படுத்துடலாம். காலு வேற வலிக்குது. வயசானாலே இந்தக் கஷ்டம்தான். மூட்டு வலி, அம்மா."

குனிந்து தடவிக் கொடுத்தார்.

சாத்தியிருந்த தம் வீட்டுக் கதவைப் பார்த்தார்.

"கடைசிப் பையனும், மருமகளும் மட்டும்தான் வீட்டிலே. மத்தவங்க ஊருக்குப் போயிருக்காங்க" என்றார் சண்முகத்திடம்.

"பேசாம, நீங்களும் உள்ளாற போய்ப் படுத்திடுங்கண்ணே!"

"சின்னஞ்சிறிசுக, தூங்கட்டும் பாவம். அதுகளாவது சந்தோஷமாய் இருக்கட்டும்" என்றார்.

இந்த அமளி, துமளியில், பையன் வெளியே வந்து எட்டிப் பார்க்காதது குறையாய் இருந்தது.

"அப்பனைக் கூப்பிட்டு உள்ளே படுக்கச் சொல்லலாம்னு தோணலே பாருங்க. பொண்டாட்டி வந்துட்டாலே பெத்தவனை மறந்துடறாங்க, இந்தக் காலத்துப் பசங்க" - சண்முகம் வேறு உசுப்பேற்றினார்.

"தலைவர் வாழ்க! சிங்கத் தலைவர் வாழ்க!

● ஜெர்மனி நாட்டில் டாக்ஸி ஓட்டுனர்கள் பயணியிடம் பேசிக் கொண்டு வாகனம் ஓட்டுவது தண்டனைக்கு உரிய குற்றம்.
தகவல்: கீழப்பனையூர் ஜெயா சீனிவாசன்

புரட்சித் தங்கம் வாழ்க! வாழ்க! வாழ்க! தலைவர் வந்து கொண்டிருக்கிறார். இன்னும் சில நிமிடங்களில் கொடி ஏற்றுவார்."

மைக்கில் ஒருவன் தொண்டை வறள அலறினான்.

சர்,சர்ரென்று இரண்டு கார்கள் வந்து நின்றதும், இடமே பரபரப்பானது...

டமால், டமால் என வெடிச் சப்தம், திடு மென மேளச் சப்தம் வேறு கேட்க ஆரம்பித்தது. நையாண்டி மேள செட் அது. 'இவர்கள் வேறா' என்று கூட்டம் வாய் பிளந்து பார்த்தது.

"ஊரான் காசுல ஷோக்குப் பண்ணுறாங்க. சீக்கிரம் முடிஞ்சிட்டா நல்லாயிருக்கும். தூக்கம் செருகுது."

பெரியசாமி கட்டிலுக்காகத் தவமிருந்தார்.

பெரியசாமிக்குத் திடீரென வயிற்றைக் கலக்க ஆரம்பித்தது. காலையிலிருந்தே கடாமுடா செய்து கொண்டிருந்தது.

வீட்டுக் கதவைத் தட்டலாமா என்று யோசித்தார். மகள் இதுவரை கதவைத் திறந்து பார்க்காதது யோசிக்க வைத்தது. சின்ன வயசு. புதுக் கல்யாண ஜோடி. தொந்தரவு பண்ண வேண்டாம்.

தலைவர் கொடி ஏற்ற, கூட்டம் கைதட்டியது படபடவென.

'அஞ்சு நிமிஷ நடையிலேதான் வாய்க்கால் இருக்கு. அங்கேயே போயிடலாம்."

முணுமுணுத்தபடி நடக்க ஆரம்பித்தார் பெரியசாமி.

'நாம வர்றதுக்குள்ள மீட்டிங் முடிஞ்சுடுமா? கட்டிலை எடுத்து, வேலு, வீட்டு முன்னாடி போட்டுடுவானா?'

மனசில் முளைத்த கேள்விகளுடன் விரைவாய் நடந்தார்.

திரும்பியபோது ஜனக்கூட்டம் காணாமல் போயிருந்தது.

டியூப் லைட்டுகள் மட்டும் விழித்திருந்தன.

"பெரிசு, உன் கட்டிலைத் தூக்கி வீட்டு முன்ன போட்டுட்டோம். எங்கே போயிட்டே?" வேலு சொல்லிக் கொண்டே நாலைந்து பேருடன் கூட்டத்தைச் சிலாகித்தபடி பேசிக் கொண்டு போனான்.

'அப்பாடி., நிம்மதியாய்த் தூங்கலாம், இனி.'

வீட்டு வாசலை நோக்கிக் காலை எட்டிப் போட்டார்.

"அட, யாரிது?"

சிறுவன் ஒருவன் கை, கால்களைப் பரத்தி, வாய் பிளந்து தூங்கிக் கொண்டிருந்தான் கட்டிலில்.

"யாருடா அது?"

ம்ஹூம்! அவர் அதட்டலுக்குப் பலனில்லை.

தலையைத் திருப்பி விளக்கு வெளிச்சத்தில் பார்த்தார்.

'முருகையன்! மெக்கானிக் ஷாப்புல வேலைபாக்குற எடுபிடி.'

'தட்டி எழுப்பலாமா' என யோசித்தார்.

பாவம், சின்ன வயசுலேயே வயத்துப் பொழைப்புக்காகக் கடையிலே மாடா உழைக்கற பய இவன். மீட்டிங்கு, வாண வேடிக்கைகளைப் பார்த்துட்டு அலுப்புல கிடைச்ச காலியான இடத்துல இங்கே படுத்துத் தூங்கிட்டான் போலிருக்கு. இன்னிக்கு ஒரு நாளு படுத்துட்டுப் போறான் போ.'

சுற்றுமுற்றும் பார்த்தார். எதிர் வீட்டுக் கல் மேடை கண்ணில் பட்டது. ஓர் ஆள் கொஞ்சம் குறுக்கிப் படுக்கலாம்தான். கஷ்டம் தான். வேறு வழி? 'தூக்கம் வந்தாலும், வரா விட்டாலும் கட்டையைக் கிடத்தி சாத்தித்தானே ஆகணும். சிவராத்திரியோ, என்னவோ இன்னிக்கு.'

முணுமுணுத்தபடியே, கல் மேடையில் போய் முடங்கிக் கொண்டார் பெரியசாமி.

## சிக்கனப் பெரியார்!



ஈ.வெ. ராமசாமிப் பெரியார் சிக்கனத்திற்குப் பெயர் போனவர். ஒரு சமயம் ஈரோடு எஸ். ஆர். சாமி சிறுவராய் இருக்கும் போது அவர் வீட்டில் உணவருந்தினார். உண்டு முடிந்ததும் பெரியார் கை கழுவ, செம்பில் உள்ள நீரை அவர் கையில் ஊற்றினார் சாமி. அப்போது பெரியார், சாமியின் தலையில் ஒரு அடி கொடுத்தார். சாமி, "ஐயா! என்னை ஏன் அடித்தீர்கள்?" என்று கேட்க, "செம்பில் தண்ணீருக்குப் பதில் நெய் இருந்திருந்தால் சடசடவென்று இப்படி அதிகமாக ஊற்றுவாயா? தண்ணீராக இருந்தாலும் அளவோடுதான் ஊற்ற வேண்டும்!" என்று கூறினார் பெரியார்.

– 'பொது அறிவுச் செய்திகள்' என்ற நூலிலிருந்து.

– எஸ்.எஸ். பூங்கதிர்

# ஆஹ்..ஹாஹ்ஹா...




''ஐயய்யோ! நம்மளுக்கு எதிராகவே பேசறாரே... போட்டி கட்சியை விட்டு நம்ம பிரிவுல அவர் சேர்ந்து ஒரு வாரம் ஆச்சுன்னு யாராவது ஞாபகப்படுத் துங்க...''




''வாங்க, வாங்க... எங்க கட்சி ஆளுங்க எல்லாம் ஓடிட்டாங்க; உங்களை மாதிரி அனுபவசாலிங்க வரமாட்டாங்களான்னு காத்துக்கிட்டிருக்கோம்...''



''நாங்கள் உரமிட்டு வளர்த்த ஊழலை எங்களாலன்றி வேறு யாராலும் அழிக்க முடியாது.....!''




''ஊழல் பெருச்சாளியே! நீ போய்ட்டா எங்க ஆட்சி கவுந்துடுமா என்ன...? உன்னை மாதிரி நூத்துக்கணக்கானவங்க இருக்காங்க இங்க....!''

- இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

